ஸ்ரீ:

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

பரமபாகவதோத்தமராகிய

ஸ்ரீமான்

குரவை. இராமாநுஜ தாசர்

அருளிச்செய்த

# நூற்றெட்டுத்திருப்பதித் திருப்புகழ்

இஃது

ம-ள-ள-ஸ்ரீ க. வ. திருவேங்கட[illegible]

அவர்களால்,

பல ஏட்டுப்பிரதிகளைக்கொண்டு

பரிசோதிக்கப்பட்டு,

செஞ்சி - இல்வீடு.

அரங்கசாமி முதலியாரால்


சென்னை :

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1897

ஸ்ரீ

# நூற்றெட்டுத்திவ்வியதேசக்

## குறிப்பு.

### நேரிசைவெண்பா.

ஈரிருப தாஞ்சோழ மீரொன்ப தாம்பாண்டி
யோர்பதின்மூன் றாமலைநா டோரிரண்டாஞ் - சீர்நடுநா
டோறோடீ ரெட்டுதொண்டை யவ்வடநா டா றிரண்டு
கூறுதிரு நாடொன்றாக் கொள்.

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

# முகவுரை.

திருப்புகழென்பது அழகிய புகழ்ச்சி எனப் பொருள்படுமேனும் பொன்னுருப் புகழாளனும் 'உயர்வற வுயர்நல முடையவனு' மான ஸ்ரீயப்பதியின் சீர்த்தியையே ஈண்டுத் திருப்புகழென்றது. அது பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயராய் ஈண்டப்புகழா னிரம்பிய நூலையுணர்த்தி நின்றது. 'இந்நூல் சுமார் நாற்பது வருடங்கட்குமுன் பதிப்படைந்துள்ளது. ஆயினும் ஆங்காங்கு சிதைந்துள்ள சந்தங்கள் சீர்பெற்றில. அவற்றை ஒருவாறு சில ஏடுகளைக்கொண்டு எனதன்பர் ம-ா-ா-ஸ்ரீ க. வ. திருவேங்கடநாயடவர்கள் சீர்ப்படுத்திக் குறிப்புகளை யமைத்து ஒவ்வொரு செய்யுளினீற்றில் பெருமாள் திருநாமமும் பிராட்டியார் திருநாமமும் ஆழ்வார் மங்களாசாசனமும் அமைத்து வைத்திருந்த பிரிதியைக்கொண்டு அச்சிட்டு முடித்தேன். அவர் நன்றி எந்நாளும் மறக்கற்பாலதன்று. இந்நூலாசிரியர் காலமுதலியன நன்கு புலப்படவில்லை. பொருட்செறிவும் குறிப்பழகும் வாய்ந்து வாசிப்போர்க்கு இன்சுவை பயக்கும் ஓசை யமைந்த இந்நூல் யாவராலும் விரும்பி வாங்கத்தக்கதே.

சோழநாட்டில் மங்களாசாசனக்ஷேத்திரம் ௪0

புராதனக்ஷேத்திரம் க

அது இராஜமன்னார் கோவில், சுவாமி திருநாமம் - இராஜகோபாலப் பெருமாள். தாயார் திருநாமம்-செங்கமலவல்லித்தாயார்.

பாண்டிநாட்டில் மங்களாசாசனக்ஷேத்திரம் ௧௮

☞ வடநாடு கஉ - ல், துவாரகைக்குந் திருவாய்ப்பாடிக்கும் இந் நூலிற் செய்யுளில்லை. ஆயினும் நந்திக்கிராமத்திற்கு வடநாட்டில் ஒருசெய்யுள் அச்சுப்பிரதியிலேயே சேர்ந்திருக்கிறது. அதையும் ஈற்றில் அச்சிட்டிருக்கிறேன். இப்புராதன க்ஷேத்திரங்களில் சில கூட்டியும் சில கழித்தும் ஆங்காங்கு அச்சிட்டு வழங்குவார்கள்.

சோழநாட்டில் திருவிண்ணகரச் செய்யுளில் குறிப்பில் இரண்டாவது சீரிலுள் தந்த என்பதை தன்ன என்றும், சிராமவிண்ணகரச் செய்யுளில் குறிப்பில் இரண்டாவது சீரில் தந்தன என்பதை தன்னன என்றும் மாற்றிக்கொள்க.

---

# விளம்பரம்

☞ இந்தக்கிரந்தங்களை வேண்டுபவர்கள் சென்னபட்டணம் தங்கசாலைவீதி தென்பாரிசம் சின்மோரியல் ஹாலுக்குப் பின் தெருவு -வது நெம்பர் கடையில், ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாய கிரந்தங்கள் அச்சிட்டு வருபவரான செஞ்சி இல் வீடு-அரங்கசாமி முதலியார் இடத்திலும், ஷையார் குமாரன் செ. இ. திருவேங்கடமுதலியார் இடத்திலும் பெற்றுக் கொள்ளலாம்.

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| திருமந்திரப் பிரமாணம் | 3 | 8 | 0 |
| பகவத்விஷயம் | 42 | 0 | 0 |
| திருக்குறுந்தாண்டகம் பதவுரை ... ... | 0 | 2 | 0 |
| திருநெடுந்தாண்டகம் பதவுரை ... ... | 0 | 3 | 0 |
| நாலாயிரம் மெல்லிய காகிதம் ... ... | 1 | 0 | 0 |
| நாலாயிரம் உரத்தகாகிதம் ... ... | 2 | 0 | 0 |
| ஆர்த்திப்ரபந்தம் ப்ரதிபதம் .. ... | 0 | 3 | 0 |
| ஆர்த்திப்ரபந்தவ்யாக்கியானம் ... ... | 0 | 10 | 0 |
| தத்வத்ரயவ்யாக்கியானம். ... ... | 1 | 8 | 0 |
| திருப்பாவைவ்யாக்கியானம். ... ... | 1 | 8 | 0 |
| கோயிலொழுகு. ... ... | 0 | 4 | 0 |
| ஸப்தகாதைவ்யாக்கியானம். ... ... | 0 | 4 | 0 |
| த்ரயகூடரகஸ்யம் ... ... | 0 | 4 | 0 |

| | | | |
|---|---|---|---|
| திருவாராதநக்கிரமம் ... ... | 0 | 4 | 0 |
| வாக்யகுருபரம்பரவ்யாக்யானம். ... ... | 0 | 1 | 0 |
| திருக்கச்சிநம்பிகள்ப்ரபாவம். ... ... | 0 | 2 | 0 |
| இருசமயவிளக்கம் ... ... | 1 | 0 | 0 |
| கூரேசவிஜயம் ... ... | 0 | 4 | 0 |
| பரப்ரம்மவிவேகம் ... ... | 0 | 0 | 6 |
| எதிராஜவிம்சதிப்ரதிபதம் ... ... | 0 | 2 | 0 |
| கோயில்அண்ணன்வாழித்திருநாமம் ... ... | 0 | 1 | 9 |
| வானமாமலைமடத்தின் ஷை. ... ... | 0 | 2 | 0 |
| உடையவர்விஷயமாகசட்டியம் ... ... | 0 | 1 | 0 |
| திருமாலைப்ரதிபதம் ... ... | 0 | 4 | 0 |
| பெருமாள்திருமொழி ஷை ... ... | 0 | 4 | 0 |
| திருச்சந்தவிருத்தம் ஷை ... ... | 0 | 6 | 0 |
| திருப்பல்லாண்டுப்ரதிபதம் ... ... | 0 | 1 | 6 |
| திரௌபதைசரணாகதிநிஷ்டை ... ... | 0 | 0 | 6 |
| ரங்கநாதருக்கும்நாச்சியாருக்கும்ப்ரணயகலகம் ... | 0 | 0 | 6 |
| அத்யயன உச்சவப்ரபாவம் ... ... | 0 | 1 | 0 |
| பாஷாண்டமதசபேடிகை ... ... | 0 | 12 | 0 |
| பழநடைவிளக்கம் ... ... | 0 | 12 | 0 |
| நித்யானுசந்தானம் ... ... | 0 | 9 | 0 |
| பிரமேயசாரம் ... ... | 0 | 2 | 0 |
| விபீஷணாழ்வார் அபயப்பிரதானம் ... ... | 0 | 8 | 0 |
| குருபரம்பரைப்ரபாவம் ... ... | 1 | 4 | 0 |
| கண்ணிநுண்சிறுத்தாம்புபிரதிபதம்<br>அமலனாதிப்பிரான் ஷை<br>திருப்பள்ளியெழுச்சிப்ரதிபதம் ... ... | 0 | 2 | 0 |
| அஷ்டாதச ரகசியம் ... ... | 1 | 4 | 0 |
| ஸ்ரீ வசன பூஷணம் ... ... | 1 | 4 | 0 |
| உடையவர் கத்தியத்ரையம் ... ... | 0 | 8 | 0 |
| திருக்கோட்டியூர் 18 - ரகசியம் ... ... | 0 | 4 | 0 |
| உடையவர் வார்த்தாமாலை ... ... | 1 | 0 | 0 |
| திருப்பல்லாண்டு அரும்பதத்துடன் ... ... | 0 | 12 | 0 |
| ஷை ப்ரமாணத்திரட்டுடன். ... ... | 1 | 0 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஞ்யானசாரம் | ... | ... 0 | 4 | 0 |
| திருக்குறுந்தாண்டகம் | ... | ... 0 | 4 | 0 |
| ஞானசார பதவுரை | ... | ... 0 | 4 | 0 |
| பிரமேயசாரம் | ... | ... 0 | 2 | 0 |
| விஷ்ணுசகஸ்திரநாமம் | ... | ... 0 | 2 | 0 |
| லட்சிமி ஷை | ... | ... 0 | 2 | 0 |
| தமிழ் சந்தியாவந்தனம் | ... | ... 0 | 1 | 0 |

இருசமயவிளக்கத்துக்குப் பதவுரையும் பிரமாணத்திரட்டும் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்துக்குரிய மற்றும் கிரந்தங்களும் விலை சரசமாகப் பெற்றுக்கொள்ளலாம்.

இங்ஙனம்:

செ. இ. அரங்கசாமி முதலியார்.

ஸ்ரீ.

ஸ்ரீராமஜெயம்.

# தனியன்.

தனதன தானதன தனதன தானதன
தனதன தானதன—தனதான.

படிதனில் வாளாவரு பரமத தேவாதிபர்
பலரையு மாலார்கதை பதிமேன்மை
பரியுற வோடேபுக ழியல்பினை யாருவரு
பலவும டாதேகொடு பணியாவும்
மிடிதனி லாழ்வோரிர வைபினிடு மாபோன்மொழி
விதரணர் தாநாணிட விடையேழ்கொல்
விசையனை வாராகனை ரகுகுல சீராமனை
மிளிர்திரு மார்பாளனை யுயர்வேத
முடிமிசை வாழ்தேவனை யுரியபல் பூணையணி
முதிர்தன மேலானவர் முறைமான
முனமடை வேகூறறு வகையவு நேரேகொடு
முழுமணி போலேபுனை தருநே
கொடியணி மாகோபுர மணிமதில் வானோர்பதி
குடிபுக வேகோலிய படியாகும்
குருகைந மாழ்வார்பத மலர்தொழு மாதாசிய
குரவையி ராமானுஜ குணவானே.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# நூற்றெட்டுத்திருப்பதித் திருப்புகழ்.

## தனியன்.

### நேரிசைவெண்பா.

வாமனனே சிந்திப்பேம் வாசிப்பேம் பூசிப்பேம்
வாமனனை நூற்றெண் பதிமாலை—பூமன்
பரவையிரா மாநுசன்றன் பாதம் பணிந்த
குரவையிரா மாநுசன்சொற் கொண்டு.

## காப்பு.

### நம்மாழ்வார் துதி.

தனத்தன தாத்தத் தனத்த தானன
தனத்தன தாத்தத் தனத்த தானன
தனத்தன தாத்தத் தனத்த தானன—தனதானா.

உரிச்சொற்றொல் காப்பியத் தமிழ்ப்ர வாகநல்
லகப்பொருள் பார்த்திட் டிலக்ய நூல்வழி
யுரைத்திடு சாத்ரப் படிக்கி யாதொரு வழுவாமற்
றொழித்தநி கூத்ரக் கவிச்சொன் மாலைக
ளிலக்கண வாக்யப் பிரக்ய நாவல
ருணக்கித மாக்கத் தரிப்பர் யானவை யறியேனே.

## நூற்றெட்டுத்திருப்பதித்திருப்புகழ்.

தரித்திடு மூர்க்கக் குணத்த னுகுமெ
னடைக்கைகள் கேட்கிற் சிரிப்ப வாமிவை
தமைப்புற நீக்கிப் பொறுத்து நீயுன — தருணாம்பில
தடுத்தெனை யாக்கிப் பரத்வ மேவிய
திருப்பதி நூற்றெட் டெனச்சொன் மேதகு
தலத்தினை வாழ்த்தித் துதிக்க வேதுணை — வருவாயே
பரித்துனை யாக்கித் தெளித்து நானமறை
வடித்தடி சேர்த்துத் தமிழ்ச்சொ லாயிரம்
விதித்தடி யார்க்குக் கிர்பைக்க மேனுடருள் — புரிவோர்போன்
விரைச்சிறு தோட்டப் பொருட்டு நாண்மலர்
மகிழ்த்தொடை சூட்டிச் சிறக்கு நாயக
விலட்சண வாக்யச் சமுத்ர மாய்வள — ருரவோனே
பெருத்தக டாட்சப் ப்ரியப்ப ரபர
தமிழ்ப்புகு மூர்ச்சற் குணத்தர் பாவிரு
திருச்செவி சாத்திப் பதித்த தேவர்க — டவர்கோனே
செழித்தக னுற்றிற் குதித்து வாளைகள்
வயற்றலை நாற்றிற் செறித்து மீதுக
டிருக்குரு கூர்ப்பொற் புளிக்குண் மேவிய — பெருமாளே

---

## சோழநாட்டுத் திருப்பதிகள். (௪0)

### திருவரங்கம் பெரியகோயில். (௧)

தனதனந் தந்ததன தான தானன
தனதனந் தந்ததன தான தானன
தனதனந் தந்ததன தான தானன—தனதான.

மருவுமென் கொண்டவய தாகு நூறிது
பெறிலுறங் கும்பொழுது பாதி போமிள
மதலைவம் பென்றுபதி னாறு போமிதி — னடுவேதான்

மகளிரங் கந்தழுவு காம நோய்முதன்
மிடிசிரங் குங்கபட வாய்மை நேசமும்
வறுமையுந் துன்பமிகு கோப தாபமும் வெருவோயு

திருமலுங் கிண்கிணென மேல்கை கால்வழி
சலமலஞ் சிந்திழுடை நாற வேதொட
ரிடர்தரும் புன்பிறவி யாத லாலிது பவோடு

ரினிவருந் தும்பிறவி மூழ்கி னுலகின்
னடியரன் பொன்றுபற வாம லேயுன
திருபதந் தங்குமொரு ஞான வாசிலை யருள்வாயே

புருவஞ் சம்பெருகு ராவ ணேசுரன்
விழுகருங் குன்றமென வோடி யேமுடி
யொருபதுஞ் சிந்தியடி சாய வேபொரு சமராட

வுலகமெங் கெங்குமனு நீட வீடண
னரசிருந் தன்பினுட னாள வானவ
ருளமகிழ்ந் தின்பமுற வேனு கோவிப ரகுராமா

திருகிகின் றஞ்சிறைய சேவ லோடொரு
குருகுறங் குங்கரையில் வாளை தாவிய
திரையலம் புந்துறையின் மாட வீதியி லணிமேவு

தெருவிலுஞ் சந்திரிகை நிலாபொ லாமணி
யுமிழ்தருஞ் சங்கினமு லாவ வேதவழ்
திருவரங் கம்பெரிய கோயில் மேவிய பெருமாளே. (௩)

சுவாமி திருநாமம்-ஸ்ரீரங்கநாதர். தாயார் திருநாமம்-ஸ்ரீரங்க நாச்சியார். இது காவிரியின் வடகரையிலுள்ளது. பத்து ஆழ்வார்களும் ஆண்டாளும் மங்களாசாசனம்.

---

## திருவுறையூர் (நீசுளாபுரி.) (௨)

தனனதன தானதந்த தனனதன தானதந்த
தனனதன தானதந்த—தனதானா.

அறிவழிய வேபிறந்து தவழ்குழவி யாயிரங்கி
யழுதழுது காலுதைந்து விளையாடி
யறிவினுட னேவளர்ந்து மகளிர்மய லாலொடுங்கி
யறவயது போய்மருண்டு குருடாய்நீள்
பொறிவழியெ லாமயங்கி யுளைகடடு மாறிநெஞ்சு
பொருமலெழ வேகசண்ட னுயிரோடு
பொருதடரும் வேளைகண்டு கருடன்மிசை யேறியன்பு
புரியவிரை வாயெழுந்து வருவாயே
நறியமுகை தாதளைந்து கொழுதுமறு கால்குடைந்து
நறையொழுகு பூமடந்தை யணியார
நகைவிரிய டாரணங்கை சுவடுபட வேயெதிர்ந்து
நடனமிடு ராஜதுங்க மணிமார்பா
மறிபுனலி னூடலம்பி யிளையகரு மேதிசென்று
வளமருத வேலியெங்கு மளறுடி
மணமொழுகு வீதியின்கண் விலைமகளிர் போலவுந்து
மருவுமுறை யூரினின்ற பெருமாளே. (௨)

சுவாமி - அழகியமணவாளப்பெருமாள். தாயார் - வரலக்ஷ்மி, உறையூர்வல்லி. காவிரியின் தென்கரையிலுள்ளது.
திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.



## திருத்தஞ்சை நகர். (௩)

தந்தத் தனதன தனதன தந்தத்
தந்தத் தனதன தனதன தந்தத்
தந்தத் தனதன தனதன தந்தத்—தனதான.

திந்தித் திமிதிட திமிதிமெ னுஞ்சொற்
றம்பட் டமுமொரு புடையின்மு ழங்கச்
சிந்தித் தடையலர் முடிகள்வ ணங்கித் தொழவேநின்
செங்கைத் தெரிவையர் கவரிது லங்கத்
துங்கக் கடகரி கடவியி லங்கத்
திங்கட் குடையினி லரசுபு ரிந்திட் டருள்வோர்தா
மந்தப் பதியினி லரசும யங்கிக்
குந்தித் தடியொடு தெருவிலி ரந்திட்
டஞ்சித் திரிவர்கள் விதிவழி சிந்தித் தறிவாரா
ரந்தப் படியடி யெனுமிவ கந்தைப்
பந்தப் பழவினை வழியின்ம யங்குற்
றம்பொற் கழலிணை நினைவைம றந்திட் டலைவேனோ
எந்தத் திசையினு மனுவினு மண்டத்
தந்தத் தினுமுள னெவனவ னுங்கட்
கெங்கட் கிறையென மகனைவெ குண்டத் தறிகீறி
யெஞ்சப் பொருபடை யிரணிய னெஞ்சைத்
துண்டப் படமுனை யுகிர்கொடி டந்திட்
டின்பப் ப்ரியமொடு குடர்கள் பிடுங்கிப் புனைவோனே
சந்தத் தடவளை வயலின்ம ருங்கிற்
செங்கட் கடைசியர் குரவைமு ழங்கச்
சந்தித் திளமுடி நடவுந டுங்கைத் தொடியோசை

சந்தக் கனியளி யிசையினும் விஞ்சக்
கம்பித் தழகெழும் வளமலி செம்பொற்
றஞ்சைப் பதிவரு மழகிய சிங்கப் பெருமாளே. (௩)

சுவாமி-நீலமேகப்பெருமாள். தாயார்-செங்கமலவல்லி.
காவிரியின் தென்கரையிலுள்ளது. பூதத்தாழ்வார்
திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவன்பினகர். (௪)

தந்தன தந்தன தந்தன தந்தன
தந்தன தந்தன தந்தன தந்தன
தந்தன தந்தன தந்தன தந்தன—தனதானா.

சந்தத மங்கையர் கும்பியில் விந்துவின்
வந்துபு குந்துதி ரண்டுபி றந்துத
வழ்ந்துவ ளர்ந்துமு யன்றுச வுந்தர வடிவாகி
சந்தியி னின்றுதி ரிந்துந டந்தும
டந்தையர் கண்டும யங்கிவி ழுந்துத
யங்கியி ணங்கிமு யங்கிமு திர்ந்திடு வயதாகி
மந்தியெ னும்பழு குந்திர டந்துத
ரங்கள்கு லைந்தவிர் சந்தம ழிந்தும
லஞ்சல மெங்கும்வ ழிந்துகி டந்துயிர் விடுபோது
மைந்த ருடன்றமர் நொந்தழ வந்துவ
ளைந்தவர் முன்சுடு கின்றபி ணந்தனை
வம்பினி லென்றனு டம்பென நம்புவ தொழியாதே
விந்திர னும்ப்ரம னுஞ்சிவ னுங்குக
னுங்கதி ருஞ்சசி யுஞ்சர ணஞ்சர
ணென்றுவி ழுந்தொ ழுந்தொழு மென்குரு நகையாடி

லங்கை கலங்கிம லங்கிய டங்கியொ
டிங்கிய ழிந்துக ழிந்திட வெம்பியெ
திர்ந்துச ரங்கடு ரந்துபு ரந்தரு ளைமொலே

யந்தணர் சந்திசெ யுந்திரு மண்டப
முன்றிலும் வண்டுறை யுஞ்சிவை பம்பவ
ரும்புக ரும்புகு ருந்துசெ ருந்துயர் பொழிலூடு

மம்புலி வந்துத வழ்ந்தெனு வெண்சுரி
சங்குத வழ்ந்துமி ழுந்தர ளந்திக
ழன்பில்வ ளம்பதி யங்கண்வ ளர்ந்தருள்—பெருமாளே. ( )

சுவாமி-வடிவழகியநம்பி. தாயார்-சௌந்தரியவல்லி. காவிரி யின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

திருக்கரம்பனூர் (உத்தமர்கோயில்.) (ரு)

தனந்ததான தத்ததந்த தனந்ததான தத்ததந்த
தனந்ததான தத்ததந்த—தனதானு.

குடங்கையால ளைத்தகுன்று சிரங்களாலெ டுத்தெறிந்து
குரங்குதாம டைத்தல்கண்டு சலராசி

குடைந்துளேகு ளித்தெழுந்து தரங்கமார்ம ணற்புரண்டு
குழைந்துதான டைத்துகந்த அணில்போல

விடங்கொள்ஞான மூத்தர்கொண்ட கயிங்கர்யாதி கிட்டைகண்டு
மியன்றதாஸ்ய மற்பமுஞ்செய் தறியாதே

னிரும்புபோல்வ லித்தநெஞ்சன் வணங்கியாச ரித்துநின்பொ
னிலங்குபாத பற்பமென்று பெறுவேனோ

மடங்கல்ராவ ணற்கொதுங்கி யடைந்தவீட ணற்கிலங்கை
வழங்கியேயொ ருத்தனன்றி யவனோடே

வளைந்தபேர மைச்சரென்று புகுந்தநால்வ ருக்குமந்த
வரங்க்ருபாக ரித்துயர்ந்த ரகுநாதா
கடந்ததாம ரைப்பதங்கொ டகண்டகோள மட்டுநின்று
கலந்தனுண்மு முக்குகங்கை முதுநீர்தான்
கரந்தைவார்ச டைக்கணிந்த பரன்பராவு பொழிலங்கு
கரம்பனூர்த வீற்றிடந்த பெருமாளே. (ரு)

சுவாமி - புருஷோத்தமர். தாயார் - பூர்வாதேவி. காவிரி யின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவெள்ளறை. (சு)

தனதைய தத்ததானன தனதைய தத்ததானன
தனதைய தத்ததானன—தனதானா.

ஒருபிள்ளை பற்றியேவர வொருபிள்ளை சுற்றியேயழ
வொருபிள்ளை யத்தனேயென மனையாளு
முலையில்லை வைக்கவோவொரு கறியில்லை நித்தமேசிறி
துணவில்லை ரட்சியேயென வவராலே
வருதொல்லை மட்டிலாதது பிறர்கொள்ள விட்டிடாயோதினம்
வளரைவர் சிட்டியேபுரி சமுசாரம்
வசமல்ல முற்றுமேயத னிடைதள்ளி விட்டிடாதெனை
மதிசொல்லி நித்யசேவைக டருவாயே
யருவல்ல நிற்சொரூபம துருவல்ல நுட்பமாகிய
வணுவல்ல வொப்பிலாவொரு பொருளாகு
மதுவல்ல மெய்ப்ப்ரகாசநல் லொளியல்ல வுற்றநீதென
வளவெல்லை யிட்டெணுவடி வுடையோனே
செருமல்லர் நிக்ரகாதிப வடுபுள்ள டர்த்தகாரண
சிறுமுள்ளெ யிற்றராநட மிடுவோனே

திரைதள்ளிநெட்டைவாளைகள் வெடிதுள்ளி முட்டிவாணுக
டிருவெள்ளறைக்குண்மேவிய பெருமாளே. (கூ)

சுவாமி - புண்டரீகாக்ஷர். தாயார் - பங்கஜச்செல்வி, சண்பகவல்லி. காவிரியின் வடகரையிலுள்ளது. பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருப்புள்ளம்பூதங்குடி. (எ)

தையந் தானந்தன தானன தந்தன
தையந் தானந்தன தானன தந்தன
தையந் தானந்தன தானன தந்தன—தனதானு.

வெல்லம் போலுங்கனி வாய்மொழி வஞ்சியர்கள்
கள்ளம் பூணுங்கொலை வாள்விழி கொண்டுபெரு
வெள்ளம் போலுந்திடு மாசையெ னுங்கொடுமை—தவிராதே

மெய்கண் டோருந்துய ராயினர் கஞ்சமல
ரையன் றானுந்தலை போயின னம்பொன்மலை
வில்லன் றானும்பல காலுமி ரந்தனன்வின் மகவானே

செல்வம் போய்லிங்கமெ லாமுடல் கொண்டனனிவ்
வையந் தானுங்கலி தோடநி றைந்ததுரை
செய்யும் போதிங்கெவ ராசையை வென்றவர்க—ளடியேனே

செல்லும் பாவம்பல கோடிபு ரிந்ததுரை
சொல்லும் போதுந்தொலை யாதுனை யன்றியொரு
தெய்வந் தானிங்குள தோசமை கொண்டருள—நினைவாரார்

நல்லன் பான்முன்படு சாபமி டிங்கொடிய
கல்லொன் றேபெண்சொரு பாகவ மூங்கியரு
ணல்கும் பாதம்புய சேவைபு ரந்தடிமை யெனையாள்வாய்

கள்ளுங் கிழம்படி மேலுநி றைந்தெணெயு
மெள்ளும் போலுஞ்சம மாகியு றைந்துயிர்க
ளணையுங் காலங்கழி யாதுத ரந்தனின்மு — னிடுவோனே

புல்லும் பாடண்டம தானுப வங்கடமை
தள்ளுஞ் சீர்வண்டமி ழாயிர முஞ்செய்துடல் [மேல
பொய்யென் றூர்தந்திரு வாய்மொழி கொண்டருளு—நெடுமா

புள்ளொன் றேறும்பிரிய நேசமு குந்தசெய
மல்குங் கோநந்தகு மாரப ரம்பரம
புள்ளம் பூதங்குடி மேவிநெ டுங்கண்வளர்—பெருமாளே. (எ)

சுவாமி-வல்வில்லிராமர். நாயார்-பொற்றாமரையாள். காவிரியின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருப்பேர்நகர் (கோவிலடி.) (அ)

தத்தத்தனத் தானனத் தன்னதன தானன
தத்தத்தனத் தானனத் தன்னதன தானன
தத்தத்தனத் தானனத் தன்னதன தனனன்—தனதான

கற்றைச்சடைக் கோன்வெளிக் கன்னகமும் ராவணன்
மட்டிட்டெடுத் தான்முதற் பொன்னுலகு சாபக
தத்திற்கெடுத் தான்மலர்ப் பண்ணவன் லோகமு—முதலூழி

கற்பத்தினிற் போமெனிற் பின்னுளவி பூதியு
மற்பத்தினிற் போமிவற் றென்னபல னுமிவை
கட்டப்படுத் தேடமெய்ப் பண்ணுதவ மேசெய்து—சமுசார

சுற்றத்தைவிட் டாசறக் கன்மநெறி யோகம
னுட்டித்திடிற் பேருநற் பெண்ணொடுபொன் மேவிய
துக்கச்சுகப் பேறினத் தன்மையவி பூதியி — னிருள்வாரி

தூர்க்கத்தொருக் கான்மனுச் சென்மமுள தாமிதி
ஓற்பத்திபெற் றூரிலித் தன்மமறி வாரெவர் [வாயே
சுற்றித்திசைத் தேனெனக் குன்னடிகள் போதும்—தருள்

பற்றிப்பணைத் தேறுகப் பன்னசிர சாயிர
சர்ப்பப்புளிக் காவணைத் தின்னடுவுண் மேவிய
பத்திப்பரியத் தாமலர்ப் பின்னுகுழ லார்திரு—மகிழ்மாதர்

பத்தர்க்கிதத் தேமுதற் சொன்னமறை நாலும்வ
டித்துத்தெளித் தாயிரப் பன்னுதமிழ் பாடிய [மொலே
பட்சத்தர்கத் தூரிபொட் டென்னவணி வோர்தொழு—வெ

யற்றுக்கைவிட் டாயிரச் சின்னபின மூய்விழ
வெட்டித்துணித் தேயெதிர்த் துன்னுசமர் வாணனை [னே
யட்டிட்டசக் ராயுதச் சின்னமுடை யோயெமை-யுடையே

அட்டக்கரத் தாய்மலர்க் கண்ணவினு ளோர்தொழு
பற்பப்பதத் தாய்கயற் செங்நெலுகள் பேர்நக
ரப்பக்குடத் தாய்மணிப் பன்னகமு ளேதுயில்-பெருமானே.

சுவாமி - அப்பக்குடத்தார். தாயார் - கமலவல்லித்தாயார்.
காவிரியின்வடகரையிலுள்ளது. நம்மாழ்வார் திருமழிசையாழ்வார்
பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவாதனூர். (கூ)

தானதன தனதான தானதன தந்ததன
தானதன தனதான தானதன தந்ததன
தானதன தனதான தானதன தந்ததன—தனதானா.

தேகருண் மொருநோயி னலறிதி பெண்டிர்குணை
மோவறுமை வருசாம காலமறி மைந்தர்கள்வி
சேடம்வய சகள்போன போதறியு டன்பிறவி யெனுநீதி

தேடுபொரு ளிடுகேடி ஞலறிதி பந்துஜன
மேன்மைகட னுடனுள போதிலறி பின்பிதிர
தேவர்நெறி பெறுபேறி ஞலறிக லன்பர்குண நரகேது

வாகுவதி லறிவாச மாமலர்ம டந்தைகுணம்
வீணில்வரு மபசார மேவிலறி வின்பநிழ
லார்குணநல் வெயின்மீது போயறிதி நின்குணமொர் பசிதர்க

மானபொழு தறியாதி நாதர்முறை துன்பம்வரு
போதிலறி யிதிலாப நீயறிதி யென்றுமறி [யே
யாமனிச ரொடுகூடி வாழுமொரு வஞ்சனெனை யருள்வாய்

மாகமொரு குடைலோக மாசனம கண்டமணி
மாடநடை நெடுமேரு நான்மறைக ளும்பரவு
மாகதர்கள் வெகுதேவர் சேவகரு ரும்புமலர் மகடேவி

மாமறைசெய் ப்ரமதேவ னூர்மகனொர் கங்கைமக
ளாகவுல கரசாள்ப்ர தாபநய சம்ப்ரமச
மாதிகுண சித்மோக சாகரச நந்தவர தரநேயா

மேகவரு ணப்ரகாச தேகசவு கந்தசுகு
மாரபிர பலராவ ணுதியெம தண்டபிர
வேசப்ரதி படராம ராமஜெய நந்தனப்ர வுடமாலே

வீடணப்ரி யவநாத கீதமுக சந்த்ரபர
காலர்திரு மொழிநேச வாசமணி மண்டபமு
மேடைபுடை திகழாத ஞரிலுறை யும்பெரிய-பெருமாளே.

சுவாமி-அண்டளக்குமையர். தாயார்-ஸ்ரீரங்கநாயகி. காவி
ரியின்வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருவழுந்தூர். (க0)

தனதனந் தாத்தத் தானன
தனதனந் தாத்தத் தானன
தனதனந் தாத்தத் தானன—தனதானு.

ஒருபெரும் பாட்டைப்பாடுறு
புழுவிழுங் கூட்டைப் பீறிய
வுடலெனுங் காட்டைத் தானொரு பொருளாக

வுடைகளுஞ் சாத்திப் பூடண
வகைகளும் பூட்டிப் போனக
வுணவுகொண் டேட்டிப் போஷணை புரிவோர்பால்

வருமிதங் கேட்டுப் போகவு
மிலையமன் சீட்டுக் காணுமுன்
மனையையும் போட்டுப் போமிது துணையாமோ

உளரறம் பார்த்திட் டாளுற
விருபதம் போற்றித் தானவை
வழிபடுஞ் சூக்மக் க்யானம தருள்வாயே

யரிகுலந் தோற்றுப் போனதை
வினவிகொண் டாட்டத் தான்முறை
யழியுமூண் டாட்டுக் கூடிய நிருதேச

னவ்விடைந் தோட்டத் தேசெல
நரிகளுங் கூப்பிட் டோடிட
வதிசயங் காட்டிப் போர்செயும் ரகுநாதா

செருமிவண் டார்த்திட் டோவிடு
முளரிவண் டோட்டுப் பூமிசை
சிறையனம் பேட்டைத் தேடிவெள் ளனைகோழி

திரணெடுங் கூட்டத் தேசெல
வலைசெழுஞ் சேற்றுக் கேதவழ்
திருவழுந் தூர்க்குட் டேவர்கள் பெருமாளே. (௪0)

சுவாமி - ஆமருவியப்பன். தாயார் - செங்கமலவல்லி.
காவிரியின் தென்கரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

---

## திருச்சிறுபுலியூர். (கக)

தனத்தனதன தாத்த தானன
தனத்தனதன தாத்த தானன
தனத்தனதன தாத்த தானன—தனதான.

மறைத்திடுமுலை காட்டு வார்தனி
பெருத்திடுமயல் பூட்டு வார்மையை
வரிக்கடைவிழி தீட்டு வார்வசி கரமாக

மருத்திலைபல கூட்டு வார்கையில்
வசப்படநகை கோட்டு வார்செய்கை
மயக்கினிலுயிர் வாட்டு வாரவர் வசமாகூ

விருக்கியநய மூட்டு வார்பொருள்
பறித்துவறுமை யாக்கு வார்பினை
விளைத்தொருபடி போக்கி லாவிடி னைகயாடி

யிரக்கவும்வழி காட்டி யேசிறு
கரித்துணியொடு மோட்டை யோடுகை
யினிற்றடியொடு போக்கு வாரவ ருறவாமோ

வெறுத்தமரரை வாட்டி யேசிறை
யடைத்திடுபடை ராட்ச தாதிகள்
விளைத்திடுசம ராட்ட மாடிய களயீதில்

வெருட்டியசுரர் மூச்சி லாவகை
யறுத்திடுசிலை கோட்டி யேதனி
விலட்சணவிளை யாட்டு லாவிய நெடுமாலே

சிறைக்களியளி பாட்டின் மூசிட
முறுக்கவிழ்திதழ் பூத்த தாமரை
செழித்திடபணை யீற்று வாளைக ளெதிரேறி

தெழித்துழுதக ளுற்றி ளூடுபு
குதித்திளவய லுற்றி ளூடுக
டிருச்சிறுபுலி யூர்க்குண் மேவிய பெருமாளே. (௧௧)

சுவாமி - அருண்மாகடலார். தாயார் - திருமாமகள். காவிரி
யின் தென்கரையிலுள்ளது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

திருச்சேறை. (ஸாரக்ஷேத்திரம்.) (௧௨)

தனத்தானன தனத்தானன
தனத்தானன தனத்தானன
தனத்தானன தனத்தானன — தனதான.

உடைச்சேலைதா குழைக்கோலைதா
விரற்காழிதா மனைக்கோலிதா
வுணச்சோறுதா திணப்பாகுதா சமுசார

முனைக்கேயலா லெனக்கேதடா
வுழைத்தாலலோ பிழைப்பாமடா
வுலைக்காரடா வடுப்பூதடா வதலாலே

கடைக்காசடா வடைக்காயடா
டணிப்பாயடா மணிப்பூணடா
கறிக்காரடா படப்போகிற தோனுமானே:

கபட்டாசையான் மனக்காமநோய்
தனக்காவெனோ வுனக்காவெனோ
கருத்தேதையா கடைத்தேறுமா றருள்வாயே
குடப்பாலையே யுறிக்காலிலே
தயிர்த்தாழியா டெடுத்தேநெய்பால்
குடித்தேகையா லுடைத்தோடவே தயிர்காணுள்
குறிப்பாகவே யுனைத்தேடியே
பிடித்தாயமா மடப்பாவைநீள்
குணிற்றால்விடா தடித்தேகவே யழுவோனே
மடற்பாளைவீழ் முடத்தாழையோ
டையிற்றுவிவா வடித்தேவரான்
மதித்தோடிவா னகட்டுடுபோய் விளையாட
மழைத்தாரையோ டெதிர்த்தேறிமா
விளைச்சாடிவா ழையைக்கீறிவீழ்
மருச்சோலைசூழ் திருச்சேறைவாழ் பெருமாளே. (கஉ)

சுவாமி - சாரங்கநாதர். தாயார் - சாரங்கவல்லி.
காவிரியின் தென்கரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

---

திருந்தலைச்சங்கநாண்மதியம். (கா)

தனத்தந்தன தனதத்த தானன
தனத்தந்தன தனதத்த தானன
தனத்தந்தன தனதத்த தானன—தனதானா
தொடுக்கின்றிலே னணியப்பொன் மாலிகை
விடுக்கின்றிலே னளவற்ற பேதைமை
துடைக்கின்றிலேன் விரகச்சு தானல மினிதாயே

துதிக்கின்றிலே னிருபற்ப சேவடி
கெடுக்கின்றிலே னவசப்பு லாதிக
டுறக்கின்றிலேன் மிகுமட்ட பாசகல் லடியாரோ

டடுக்கின்றிலே னொருமித்து ஞமம
துரைக்கின்றிலேன் மதியற்று நாடொறு
மகிர்ச்யங்களே புரிகெட்ட பாவியை யருளாயே

லவத்தங்களா குமுன்ரட்ச காநல
முளத்தன்பினோ டுதிருத்தி யேயுன
தருட்டங்குமா றுபயிற்றி நீயருள் புரிவாயே

திடுக்கென்றுவா னுறைவிட்டு வீசிட
முழக்கம்பமீ துகைதட்ட வேயெதிர்
சிரித்தண்டகோ ளமுகட்டி னீளரி யுருவாயே

சினக்குங்கடோ ரமடுத்து வீறொடு
பிடித்தந்தவா சல்கடைக்கு ளேயுகிர்
தினைத்தந்திவே ளைதனிற்பொ லாவிர ணியநாமன்

தடத்துங்கமார் புகிழித்து நால்குடர்
தனைத்தொங்கன்மா லைதரித்து மாதவர்
தமக்கன்பனு னமகற்கு மாமுடி புனைவோனே

தனிப்பொங்கர்மீ துகுதித்து வானைகள்
வாய்ற்சங்கினோ டுமெதித்து லாவிய
தலைச்சங்கநாண் மதியத்துண் மேவிய பெருமாளே. (கஙு)

சுவாமி - நாண்மதியப்பெருமாள். தாயார் - தலைச்சங்கநாச்சியார்.
காவிரியின் தென்கரையிலுள்ளது. பூதத்தாழ்வார்
திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருக்குடந்தை. (கும்பகோணம்.) (௧௪)

தனதனதந் தத்ததந்த தனதனதந் தத்ததந்த
தனதனதந் தத்ததந்த—தனதான.

ஒருவரைநஞ் சுற்றமென்று வொருவரைவன் பிற்பிணங்கி
யொருவரைநம் பித்திரிந்து விருதாவி
னுணர்வுகலங் கித்தளர்ந்து தனையுமறந் துட்புகுந்த
வுனையுமறந் திட்டறங்க ளறியாதே
பெருகுப்ரபஞ் சத்தகன்ற கடலிலழுந் திப்பரந்த
பிணிபசியென் றற்றிரண்டு சுறவோவாய்
பிளிறிவிழுங் கச்சுழன்ற சுழியிலலைந் தெய்க்கவைந்து
பெயர்கள்புரிந் திட்டவம்பு தொலையாதோ
வருமறையந் தத்தினின்று வுபநிடமந் த்ரத்திருந்தொ
ரதிப்ரமசங் கற்பமென்ற றவருந்தே
யுவரவர்தங் கட்கிசைந்த வறிவறிவிம் பத்தினின்ற
வளவளவின் பப்பதங்க ளருள்வோனே
மருவொழுகும் பற்பமங்கை புவிமகளம் பொற்பதங்கள்
வருடவலஞ் சுற்றிவந்து தமிழாலே
மழிசைபரன் சொற்ப்ரபந்த திருமொழியன் புற்றெழுந்து
மருவுகுடந் தைக்கிடந்த பெருமாளே. (௧௪)

சுவாமி - ஆராவமுதர், சாரங்கபாணியார். தாயார் - கோமளவல்லி. காவிரியின்தென்கரையிலுள்ளது. பூதத்தாழ்வார் பேயாழ்வார் திருமழிசையாழ்வார் நம்மாழ்வார் பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்கண்டியூர். (கரு)

தனதானன தனத்தந்த தானன
தனதானன தனத்தந்த தானன
தனதானன தனத்தந்த தானன—தனதானு.

படைவாள்விழி மருட்டுங்கு லாலிக
ணகையான்மய லெழுப்புங்கு பாடிகள்
பரிவோர்குடி கெடுக்குந்து ரோகிகள் வசமாயே
படுவோர்பொருள் பறிக்குங்கு ஞாலிகள்
புதியோர்தமை மழுப்பும்பி சாசுகள்
பழையோர்தமை வெருட்டுங்க ரோதிக ளுறவாயே

உடலாலுயி ருமற்றைம்பு லாதியு
மனமாதியும் வளப்பஞ்ச பூதமு
முணர்ஞானமு மவத்தங்க ளாயின வினிமேல்யா
னெழியாவிரு வினைக்கென்செய் வேனருள்
புரிவாரிலை யெனக்கித்த நோய்கெட
வுனைநாடொறும் வழுத்துந்தி யானம தருள்வாயே

செடநீறெழ வெரிக்குங்க்ரு பாகர
ரடியாரடி யருக்கன்ப ரானவர்
செடியவர்வினை யறுக்குந்த யாபர மகிழ்மாறர்
செயான்மறை தெளிக்கும்பு ராதன
தமிழாயிரம் வடித்தின்சொ லாலொரு
திருவாய்மொழி யுரைக்கும்ப ராபர செமொலே

மடைவாய்தவழ் முடச்சங்க ராசிக
ணிறைருஜுமி ழுமுத்தங்க ளானவை
மதிபோனிலவெ றிக்கும்ப்ர காசவெள் ளம்தாலே

மலர்வான்முகை வெடிக்குங்க லாரவின்
னறையாறுவ ளர்க்கின்ற சாலியின்
வயன்மேவிய திருக்கண்டி யூர்வரு பெருமாளே. (கரு)

சுவாமி-அரன்சாபந்தீர்த்தபெருமாள். தாயார்-கமலமடந்தை.
காவிரியின் தென்கரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

---

திருவிண்ணகரம். (சசு)

தானன தந்த தனத்தன தந்தன
தானன தந்த தனத்தன தந்தன
தானன தந்த தனத்தன தந்தன—தனதானா.

ஈதவ முன்ன ரியற்றிய பண்பிலி
சாதன நன்மை யளித்தது வென்றறி
யாதழி கன்ம பலத்தைநி னைந்தது மனைவாழ்வு
யாவையு மெம்மு வெனப்ரமை கொண்டொரு
காசொரு தன்மமி டப்பத றுங்கொடி
யார்கட முன்னைவி னைப்பய னென்றையு மறியார்பா
லோதிய பன்னு தமிழ்ப்பல வுந்தனி
பேசுத லின்னை யைவிற்றிட லங்கதி
னாதிய மென்னை கிடைக்கும ரும்பொரு ணிலையாமோ
வூழ்வினை தன்னை நினைக்கிலர் செந்தமிழ்
மாலைகொ டென்னை வழுத்திடி லங்கது
வோவுயர் பொன்னு லகத்தர சுந்தரு மறிவாரார்
வீதிக டம்மி லிடைப்பெண்ம டந்தையர்
போவது தன்னை யயிர்த்துவி ரைந்தவர்
வீடொடு திண்ணை யடைத்தெதெ டும்பட விடைபீறி

மேலிடு பண்ணை யுறிக்கல சந்தயிர்
பாலொடு வெண்ணெய்கு டிக்கமு ழைந்துரன்
மீதினி லும்மியை வைத்தநி னிணறுகை யதனாலே

கூறுகள் பண்ணியெ டுப்பது கண்டொரு
தாய்சிறு கண்ணிபி ணிக்கவ ரும்பொழு
தோரிரு கண்ணுமீ கிழ்ந்தழு மன்பர்கள் பெருமானே

தோடவிழ் சண்ணமி றைத்தலர் வண்டிசை
பாடிட மென்மயி னட்டமி டும்பொழில்
சூழ்திரு விண்ணக ரத்திலி ருந்தருள் பெருமாளே. (கசு)

சுவாமி - உப்பிலியப்பா. தாயார் - பூமிதேவி நாச்சியார்.
காவிரியின் தென்கரையிலுள்ளது. நம்மாழ்வார்
திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்கண்ணபுரம். (கஎ)

தனத்தன்ன தனந்தன தானன
தனத்தன்ன தனந்தன தானன
தனத்தன்ன தனந்தன தானன—தனதான.

பரித்தென்ன சகந்தன்ம தானம
தளித்தென்ன மகம்பல வேள்விகள்
பணித்தென்ன தினந்தின மேகலை யிகழாதே

படித்தென்ன புலன்பொறி யாவையு
மறுத்தென்ன தவஞ்செப மேயனு
பவித்தென்ன தெரிந்துணர் வேதநன் னெறியாவு

முரைத்தென்ன மெய்மந்திர நூலனு
சரித்தென்ன சுதந்த்ரவி காரம
தொழித்தென்ன பலன்சிறி தாயினு முளதாமோ

வுனக்கென்ன நினைந்தடி யாரவர்
தமக்கென்ன மருந்திட வேயிட
வுளத்தெண்ணு தலொன்றின்ம காப்ல மறிவாரார்

பொருப்பென்ன வுயர்ந்தகொல் யானையின்
மருப்பென்ன வளர்ந்திகழ் நீரது
புடைப்பென்ன நிமிர்ந்தப டாமுலை பொரவேதான்

பொருட்டென்ன மிருந்தென மார்பிடை
மலர்ப்பெண்ண ருள்கொண்டினி தாய்வளர்
புகழ்ப்பண்ண வசம்ப்ரம சாகர நெடுமாலே

திரைத்தண்ண றவங்கமழ் வாவியின்
முடத்தென்ன மரம்பொதி பூவிரி
சிறுக்கன்னி யிளங்கமு காடவி மிசைதாவி

சினச்சின்ன பினம்பட வாளைகள்
வயற்செந்நெலி னங்கதிர் மீதுகள்
திருக்கண்ண புரந்தனின் மேவிய பெருமாளே. (கஎ)

சுவாமி - சௌந்தரராஜப்பெருமாள். தாயார் - கண்ணபுரநாயகி. காவிரியின் தென்கரையிலுள்ளது. நம்மாழ்வார் குலசேகர வாழ்வார் பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவாலிதிருநகரம். (கஅ)

தான தானன தத்தன தந்தன
தான தானன தத்தன தந்தன
தான தானன தத்தன தந்தன—தனதான.

மாத ராசைபெ ருக்கவும் ரஞ்சித
மோக ராகம்வ ருத்தவு நெஞ்சினில்
வாடி வாடியி ளைக்கவு மன்புறு சுகமானார்

வாச மாலைமு டிக்கவும் விஞ்சிய
தேக பூடணம் வைக்கவு மின்பொருள்
வாசி தேடியு ழைக்கவு மங்கிரல் லறிவேபோய்

வேத நீதிவி டுக்கவு மிங்கித
காம நூல்கள்ப டிக்கவு மங்கையர்
வீடு வாசலெ டுக்கவு நண்பொடு புவிமீதில்

வீறு பேசிந டக்கவும் வம்பர்க
ளோடு கூடிந கைக்கவு மென்கணில்
வீணி லேபொழு திப்படி சென்றது மமையாதோ

நாத நாயக சிற்பர சம்ப்ரம
வேத பாரக விக்ரக சங்கித
நாத கீதவி லட்சண சங்கிரம நெடுமாலே

ஞான பூரண நித்ய சுதந்த்ரவி
னோத பூதச கத்ரமெ னுந்திரு
நாம வாமன முத்தர் வணங்கிய பெருமானே

ஆதி யாயரு வுக்கரு வுந்திகழ்
சோதி யாயுரு வுக்குரு வென்றும
நாதி யாயகி லத்துணி றைந்தரு ளுருவோனே

யானை வாளைவெ ருட்டிவெ குண்டெதிர்
சாலி வேலிவு ரப்பில் விழுந்துக
ளாலி மாநக ரத்தி லிருந்தருள் பெருமாளே. (கஅ)

வாமி-வயலாளிமணவாளர். தாயார்-அமுதகடவல்லி. காவிரியின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருநாகை. (நாகபட்டணம்) (௧௧)

தன தனத்தன தானன தந்தன
தன தனத்தன தானன தந்தன
தன தனத்தன தானன தந்தன—தனதானு.

மலைவளர்த்தவ ரார்வன மங்கெழ
விதைவிதைத்தவ ரார்கட லின்சலி
மதுபெருக்கின தார்நதி யின்றதை புனலோடி

வரவிறைத்தவ ரார்மிரு கங்களி
னிரைகொடுத்தவ ரார்கக வங்கிச
வரைவுகட்டின தார்கய லெங்கணும் விளையாட

நிலைமையிட்டவ ரார்மல ரின்புது
மணமளித்தவ ரார்பகி ரண்டமு
நிலைநிறுத்தின தாரிவ டங்கலு நினைபோதி

னினதுரட்சக மேயல திங்கினி
யெவர்கள்ரட்சக மேதுசு தந்திர
நினைவெடுத்துனை யாருமறிந்தில ரவராவா

ரலைகடற்றுயின் ஞானப ரம்பர
கமலலட்சுமி நாயக நம்பர
வதிப்ரமச்சரு வேசநி ரந்தர நெடுமாலே

யதிகலட்சண பூரண சந்திர
சருவரட்சக நாரண நந்தன
வடவெயிற்றசு ரேசர் மடிந்திட வமருடு

சிலைவளைத்தக்ரு பாலது ரந்தர
வடியருக்கெளி தாகியி ருந்தவ
சிவனயற்கரி தாகியு யர்ந்திடு முரவோனே

திருமஙறப்பொரு ளாயிரம் விண்டரு
ளொருதிருப்பர காலர்வ ணங்கிய
தெரிதமிழ்த்திரு நாகையி னின்றருள்—பெருமாளே. (கக)

சுவாமி - சௌந்தரராஜப்பெருமாள். தாயார் - சௌந்தரியவல்லி.
காவிரியின் தென்கரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்.
மங்களாசாசனம்.

---

## திருநறையூர். (உ0)

தனத்த தனதன தானா
தனத்த தனதன தானா
தனத்த தனதன தானா—தன்தானா.

மருத்து மதர்விழி மானே
ரசித்த பணிமொழி தேனே
மதித்த முலைமலை தானே வரிகோதை
மணத்த புரிகுழன் மாலோ
பிடித்த துடியிடை நூலோ
மடிப்பு மணிவயி றாலோ வெனவேதான்
பெருத்த மயறரு மாதர்
தமக்கு முழுவிலை யாயே
பிதற்றி யறிவறி பேயா யுணர்வாலே
பிழைக்க விதியறி யாதே
திருட்டு மயலிடை யேவீழ்
பிணக்க மறவரு வாயோ வறியேனே
யிருத்து திரிபுர நீறு
வரித்த வொருகணை யாலே
யெரிக்கு மொருசிவ னார்தா டொடோனா.

யிரக்க வகைதெரி யாதே
யுனக்க பயமென வேதா
ளிரக்க முடனருள் வானோர் பெருமானே

திருத்து மறைமொழி நாலா
யிரத்த மிழ்புரிந மாழ்வார்
சிரத்தி னடிதொழு தேவே திருமாலே

திருக்கு மலரவிழ் தேனு
றுடைத்த வயன்மரு கால்பாய்
செழித்த திருநறை யூர்வாழ் பெருமானே. (உ0)

சுவாமி-வடிவழகிய நம்பி, தாயார்-நம்பிக்கைநாச்சியார்? காவிரியின் தென்கரையிலுள்ளது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருநந்திபுரவிண்ணகரம். (உக)

தானன தந்தன தத்தன - தானன தந்தன தத்தன
தானன தந்தன தத்தன—தனதானு.

ஏதில னென்றும்வ னத்துறை - சாதியி னுங்கடை கெட்டவ
னேழையெ னுங்குக னைத்தன தருளானீ

ரேதமி றம்பியெ னக்கொரு - சீதைகொ ழுந்தியு மக்கினி
யாதொரு தம்பியெ னச்சொலி யினிதாயே

யாதர வன்புபெ ருத்திரும் - வாருமெ னுந்தம் வுற்றுற
வாடிய ருங்கருபை வைத்தனை யதனாலே

யாயினு நன்றுன ரட்சகம் - யானத றிந்துன டைக்கல
மாகிய டைந்தனெ னப்படி யருள்வாயே

மாதவர் கண்டுவெ ழுத்தம - ராமர மன்றுதொ ளைப்பட
வாலி கிடந்துப தைத்திட வெரிழும்கி

வாரிசு ழ்ன் றுகொ தித்திட - வீடண னின்றுக ளித்திட
வானவர் துந்துபி கொட்டிட வமராடி
சூதிடு லங்கைது ட்பட - ராவணன் மங்கிவி ழக்கடி
தோர்சிலை நின்றுரு ளித்திடு ரகுராமா
சோதித ருஞ்சுடர் விட்டொளிர் - கோபுர மண்டப பத்திகள்
சூழ்திரு நந்திபு ரீத்துறை பெருமாளே. (உக)

சுவாமி - ஜகந்நாதர். தாயார் - செங்கமலமடந்தை. காவிரியின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவிந்தளூர். (உஉ)

தனதானன தந்த தாத்தனதன
தனதானன தந்த தாத்தனதன
தனதானன தந்த தாத்தனதன—தனதான.

மடவாரொடு சிங்கி பூட்டினையவர்
பிறகேசெல வும்பி னூட்டினய்தரு
மயலேபொரு ளென்று நாட்டினய்வறு மையினாலே
வலியாரொடு கெஞ்ச மூட்டினயிரு
வினையால்வெகு துன்ப மாட்டினய்பிற
வழியேகதி யென்று சாட்டினயிவை தமியேன்மே
லிடுசோதனை யின்று பார்த்தியோவுன
தடியேனென னுமின்சொன் மாத்ரமேயல
திடையாவலி யெங்க ணேற்றமோவிலை யறியாயோ
வெளியேனலை கின்ற ப்ராத்தியோதிரு
வுளமோவிது வென்கொல் ப்ராப்யமானதுன்
னிருசேவடி வந்து காட்டினுமென் னிடர்போமே

திடமாய்கைகள் கண்ட தீர்த்தனேகுரு
குலநாயக வஞ்ச கோத்திரனே திரி
செகமேழ்பர வுஞ்சி ரேட்டனேபுகழ் மகிழ்மாறர்

திருவாய்மொழி கொண்ட மூர்த்தியேயரு
மறைநால்வகை நின்ற பாத்தியேயதி
செயமாய்நட னஞ்செய் கூத்தனேயெமை யுடையோனே

யடல்வானவர் தங்கள் பாக்யமேதொழு
மடியார்திரு மந்த்ர போக்யமேயய
னரன்மாதவர் தங்க டாட்சனேதிரு நெடுமாலே

யறுகால்வரி வண்டு பாட்டின்மூசிட
மலர்வான்முகை விண்டு பூத்தவாவியி
னணிசேர்திரு விந்த ளூர்க்குண்மேவிய-பெருமாளே. (உஉ)

சுவாமி-சுகந்தவனநாதர். தாயார்-புண்டரீகவல்லி.
காவிரியின் வடகரையிலுள்ளது. குலசேகர வாழ்வார் திருமங்கை
யாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருச்சித்திரகூடம். (சிதம்பரம்.) (உ௩).

தத்ததனு தத்தந் தனந்தன
தத்ததனு தத்தந் தனந்தன
தத்ததனு தத்தந் தனந்தன—தனதானா

அட்டதிசா வட்டங் குலுங்கிட
துட்டமிருகா திக்கங் களுங்குலை
யக்கரியோ டெட்டுந் துளங்கிட வெதிராடி

யக்ரமகோ பச்சண் டன்வெம்பக
டெற்றிநடா விக்கண் டலங்களை
யுற்பொறியா டத்தண் டிவந்துயிர் பிடிபாசம்

விட்டெறிபோ தைக்கஞ் சியின்புற
விச்சகமே முற்கொண் டியம்பினும்
விட்டுவிடா னுக்ரஞ் செய்வஞ்சக னவனுலே

மெத்தவும்வா டிச்சிந் தைநொந்துன
டைக்கலமா வுட்கொண் டடைந்தனென்
விக்ரமனே சித்தந் திரும்பியுன் னருள்கூர்வாய்

மட்டவிழ்வா சத்தண் டடங்கரை
யிற்புனலா டக்கண் டிருந்தும
ணித்துகில்வா ரித்திண் குருந்துயர் மரமீதில்

வைத்ததிலே றிக்கொண் டிரங்கியி
டைச்சியர்சே ரக்கெஞ் சிநின்றும
ரத்திடைநா ணிக்கும் பிடுந்தொறு நகைகூர்வோய்

சிட்டர்பரா வத்தொண் டுகொண்டருள்
ரட்சகனே பட்சம் புரிந்திடு
சிற்பரனே சக்ரம் பொலிந்தகை நெடுமாலே

செச்சைநிலா முற்றஞ் சிறந்தொளிர்
பத்திரமா ணக்குந் தளந்திகழ்
சித்திரகூ டத்திற் றுயின்றருள் பெருமாளே. (உ௩)

சுவாமி-தில்லைக்கோவிந்தராஜர். தாயார்-புண்டரீகவல்லி.
காவிரியின் வடகரையிலுள்ளது. குலசேகர வாழ்வார் திருமங்கை
யாழ்வார் மங்களாசாசனம்.

## திருச்சீராமவிண்ணகரம். (சீகாழி.) (உ௪)

தானன தந்தன தத்தன தந்தன
தானன தந்தன தத்தன தந்தன
தானன தந்தன தத்தன தந்தன—தனதான.

காணோவு கண்ணிடி குத்தனெ டுஞ்சுரம்
வாய்நோவு குன்மம்வ யிற்றுவ ருப்பிணி
காணாத புண்ணழி குட்டம ருந்திடு கசநோவு

காசீதாடு கனனவெ டிப்புவி டங்கடி
நோயீளை சன்னிவ விப்புசி ரங்குகள்
காமாலை குன்னிரு மற்கைமு டங்கல்பல் வலியோவா

மேனோவு சென்னியி டிப்பென நின்றிடு
தீராத கன்மபி ணிக்கும னந்தர
மீளாத சன்மவி னைக்கும ருந்தவை புவிமீதின்

மேலான வுன்னரு மைக்கொரு பங்கய
சீபாத மன்னவை பெற்றிடி லிங்கிவை
வேரோடு சின்னபி னப்படு மென்பதை யறிவாரார்

தானாடு பொன்னக ரத்தர சென்றுயர்
கோமானை மென்னல்வெ றுத்தர மங்கையர்
தாமோட வந்தக ரத்தைவ னைந்தி ஷினிதாயே

தாதாடு தண்ணிறை கற்பகம் விண்டலர்
பூமாலை பின்னைத னக்கரு ளும்ப்ரிய
தாடாள முன்னுல கத்தைய ளந்தரு ளிருதாளா

தேனேறு தென்னரு விப்புனல் சென்றுவ
ராழுவி விண்ணிடை தத்திவி ழுந்துகள்
சேருடு பண்ணைவ ரப்பினி லுங்குட

தேரோடு சந்நிதி யிற்றெரு வெங்குநி
லாவீச வெண்ணகை முத்தமு மிழ்ந்திடு
சீராம விண்ணக ரத்தில்வி ளங்கிய பெருமாளே. (௨௪)

சுவாமி-திருவிக்ரமநாயகர். தாயார்-உலகநாயகி.
காவிரியின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

---

திருக்கூடலூர். (௨௫)

தானதானன தாத்த தானன
தானதானன தாத்த தானன
தானதானன தாத்த தானன—தனதானா.

ஈனமாநிதி யேற்றி யேநிறை
தேகமாகிய வோட்டை யோடம
தேறியாசையி னூற்றி லோடியோர் சமுசார
வேகவாரிதி நாப்ப ணூறவி
காரமேசுழல் காற்றி னாலனு
ராகவார்சுழி தாக்கி யேவிழ வதனூடே
யானதாய்தமர் கோத்ர ராகிய
நீள்சுறாவுண மூர்ச்சை யேபட
வார்வடிமவுமிவ் வாத்து மாவைநல் லருளாலே
மானரியாகனை யேற்று வாரினி
நீயலாதெவர் காப்ப ரோவெனை
யாள்வதேயுன தாட்சி யாகிய முறையாமே
மானமேவுபி ராட்டி யானவள்
மாயமானினை வேட்ட லாலவு
மானராவண ராட்ச தாதியர் கொடுபோக

வாளிவார்சிலை கோட்டி மாதுபி
ஞேடியேசிறை மீட்ட பூரண
மானநீனக டாட்ச ராகவ நெடுமாலே

கூனனீளிரு கோட்டி யானைமுன்
மூலமேயெனு மாத்ர மேபகை
கோவெனுவிழ வாக்கை யேபுரி யறவோனே

கோவிஞயக பார்த்த சாரதி
யானைநாதசர் வாத்ம நாயக
கூடலூர்வளர் மூர்த்தி யேசுரர் பெருமாளே. (௨௫).

சுவாமி-வையங்காத்தபெருமாள். தாயார்-பத்மாஸனவல்லி.
காவிரியின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

---

## திருக்கண்ணங்குடி. (௨௬)

தன்னந்தன தானன தானன
தன்னந்தன தானன தானன
தன்னந்தன தானன தானன—தனதான.

தன்னந்தனி யேபடு வாரெவர்
முன்னம்பிற வாகிய பாதக
சன்மமபல கோடியின் மேலுள வைபோக

தன்னெஞ்சறி யாதபொ யோவிலை
வன்னெஞ்சகர் நானல தாருளர்
தன்மந்தய வாதர வோவிலை யதனலே

யின்னன்புட ஞனை யேபெற
வெண்ணும்பொழு தாயிர மாயினு
மென்னஞ்சலி யீளே தோக்ருபை முதலாக

வின்னமிப்ரிய மாயெனை நீபெற
வுன்னும்பொழு தோகொடி தாமென
தெண்ணர்ந்தரு பாதக மானது தடையாமோ
மன்னுந்தமி ழாயிர மாமறை
பன்னுந்திரு வாய்மொழி யோதிய
மன்னன்சட கோபனை நாளுமுன் னடித்தாழ்
வன்னங்கரு மாமுகில் போலவு
மின்னின்றிரு மார்பினில் வீசவும்
வண்ணங்கரு டாசல மேல்வரு முரவோனே
ன்னெஞ்சுடை யோரினி லாதவ
கண்ணம்புய பாத சரோருக நெடுமாலே
கன்னங்கரு மேதிகள் பாயமெய்
துண்ணென்றிள வாளைகள் பாய்தரு
கண்ணங்குடி யாநகர் மேவிய பெருமாளே. (உ௬)

சுவாமி - சாமளமேனிப்பெருமாள். தாயார் - அரவிந்தவல்லி, காவிரிக்குத் தென்கரையி லுள்ளது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருக்கண்ணமங்கை. (உ௭.)

தனத்த தத்தன தந்த தானன
தனத்த தத்தன தந்த தானன
தனத்த தத்தன தந்த தானன—தனதானு.

மருட்டி வெட்டிடு கண்க ளோவெகு
ரடப்பு டைத்தெழு கொங்கை யோமலர்
மணத்த மைப்படு கொண்டை யோகுறு நகையோடு

மடித்தி லேச்சுரு டந்த தோவுடை
கெகிழ்த்த வெட்கமி குந்த தோவுடன்
மடித்த லத்திலி ருந்த தோவவர் | மூலமீதில்

இருத்தி யிச்சைமொ ழிந்த தோதலை
வளைத்து முத்திபு ரிந்த தோகையி
லெடுத்தி றுக்கிய ணைந்த தோவென | நினைதோறு

மிரக்க மெத்தனை சிந்தை யானதி
லுருக்க மெத்தனை பெண்க ளாசைக
ளிலட்ச மப்படி யன்புன் மேலனு | வதுகாணேன்

குரக்கி னப்படை கொண்டு வாரிதி
யடைத்த ணைக்கடை கண்டு வார்சிலை
குழைத்த ரக்கரி லங்கை பாழ்பட | விசையோடு

குறைத்த லைக்கள நின்று சோரிகள்
குதித்தி டப்பிண முண்டு கூளிகள்
குளித்தி டக்கழு தெங்கு மாடிட | வமராடு

சரித்தி ரப்பிர லங்கொள் ராவணன்
முடித்த லைப்பரை சிந்தி வீடணர்
தமக்க ளித்தர சன்பி னோடரு | ணெடுமாலே

சகத்தி ரட்சக செங்க ணாயக
வழுத்து சற்சன சங்க நாயக
தமிழ்த்தி ருக்கண மங்கை மேவிய | பெருமாளே. (௨௭)

சுவாமி - பக்தவச்சலப்பெருமாள். தாயார் - அபிடேகவல்லி.
காவிரியின் தென்கரையி லுள்ளது. திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

## திருக்கவித்தலம். (உஅ.)

தனத்த தத்த தத்த தானன
தனத்த தத்த தத்த தானன
தனத்த தத்த தத்த தானன—தனதான.

உருக்க முற்ற ழைப்பர் சேலையை
யவிழ்த்த விழ்த்து டுப்பர் சோமனை
யொதுக்கி மற்ற தற்கு ளேகுறு நகையாடி

யுதைப்பர் சற்றி ணக்க மாகுவர்
கடித்தி லைச்சு ருட்கை மாறுவ
ருருட்டு மைக்க டைக்க ணேபொர மடமாதர்

வருத்து மிச்ச கத்தி லேயித
முருத்து மச்ச கத்தி லேதலை
மடித்த கைப்பு டைப்பி லேபெரு மயலாகி

மனத்த கத்த ழுக்கு ருவகை
யடைத்தி ருட்ட றைக்கு ளேபடும்
வலைத்தொ டக்க றுத்து நீயருள் புரிவாயே

தரித்த முத்தி ராக்கை நாவலர்
பொருட்டெ ளித்தெ டுத்த நான்மறை
தமிழ்க்கொ ழித்து ரைத்து னீக்கழ றெழுவேதான்

தழைத்த கட்செ விச்சை யோகவெள்
வரிச்சு ருட்டு டற்ப ணாடவி
தனிற்ற னித்தி ருக்க ணேதுயி லெனுமோலே

செருக்க ளத்தெ திர்த்த ராவணன்
முடித்த லைக்கு வட்டி னோடடி
தெறித்த மார்க்க ளத்தி லேபொடி படமீறு.

சிலைத்த லைச்செ றித்த நாலெனுலி
புடைத்தெ ழக்கு மைழத்த சேவக
திருக்க வித்த லத்தின் மேவிய பெருமாளே. (உஅ)

சுவாமி-கஜேந்திரவரதர்; தாயார்-இரமாமணிவல்லிநாச்சியார்.
காவிரியின வடகரையி லுள்ளது. திருமழிசையாழ்வார்
மங்களாசாசனம்.

---

## திருவெள்ளியங்குடி. (உகூ.)

தைய தந்ததன த னன தந்தன
தைய தந்ததன தானன தந்தன
தைய தந்ததன தானன தந்தன—தனதானு.

உள்ள மும்கொடிது மாயநெ டுங்கலி
வெல்ல வுங்கடிது மோகமொ டிந்திய
முள்ள வஞ்சமொழி யாதுநி ரந்தர மிவையாலே
யுள்ள மெங்குமுள னுய்கிறை கின்றவுன்
வல்ல பங்களறி வாரெவ ருன்றனை
யுள்ளு கின்றபெரி யோர்களி டங்களி லினிதாயே
எள்ள ரும்பிளவு பாதிப குந்தன
செய்யு மன்புடைய ரேயறி கின்றவ
ரில்லை யென்பவர்கள் யாருமறிந்திலர் விருதாவி
லெள்ளு கின்றபர வாதியர் தந்தலை
கொள்ளி கொண்டுசொறி வாரது வன்றியு
னெல்லை கண்டிலரை யோதமி யென்றனை யருள்வாயே
புள்ளி டந்தவதி சூரப யங்கர
மல்லர் தங்கள்குல காலது ரந்தர
பொய்யு றுஞ்சகடம் வீழவு தைந்திடு முரவோனே

புல்லர் தங்களிட மாறியி ருந்தவ
நல்ல சிந்தையுடை யோரிடை நின்றவ
புல்லொ டுங்கன்முத லாயின வுங்கதி பெறவீவோய்

வெள்ளி வெண்கயிலை யீசன ருந்தவ
ரல்லி யங்கமல வேதனொ டுங்கடல்
வெள்ள முண்டுகழி யாதுல குண்டுமிழ் நெடுமாலே

வெள்ள ருங்கமலை சீதைகு றங்கிடை
பள்ளி கொண்டவொரு நாயக தென்றிரு
வெள்ளி யங்குடியில் வாழ்வுவி ளங்கிய பெருமாளே. (உசு)

சுவாமி - கோலவல்லிராமர். தாயார் - மரகதவல்லி.
காவிரியின் வடகரையி லுள்ளது. திருமங்கை யாழ்வார்
மங்களாசாசனம்.

---

## திருமணிமாடக்கோயில். (௩0.)

தனதா னத்தா னத்தன தந்தன
தனதா னத்தா னத்தன தந்தன
தனதா னத்தா னத்தன தந்தன—தனதானா.

ஒருபா னைக்கீ ழக்கினி மண்டிடி
னிறைநீ ருட்ட திக்கமெ ழுந்திடு
முடல்கீ றுற்றுலப்படி தன்குண மதுபோல

வுயிர்பே தித்தே துக்கசு கங்களி
லரசா ளப்போய் நற்குடை தண்டிகை
யொடுமே விட்டோ லக்கமி ருந்தவர் பெருவாழ்வு

தரமா றிக்கீழ் தத்திவி ழுந்தொரு
முடமா கிக்கா றட்டிக டந்துகை
தடியே றிப்பீ றற்றுணி தொங்கிட மனைதோறு

தலைவா சற்கே கப்பரை யுங்கொடு
பிடிசோ றப்பா பிச்சையி டென்றுமெய்
தடுமா றத்தா னிற்பர றிந்துனை நினைவாராரர்

கருகூ லத்தே கப்பமி டுந்திறை
யதுசோ கப்பா கப்பட நின்றுப
கவதா ளுக்கே சத்ரமி டும்ப்ரிய பரகாலர்

கலியா ணத்தா விட்டுவ ரும்பணி
கொடுபோய் வைத்தே தர்க்கமி டுஞ்சிறு
கணையா ழிக்கே கொட்டவ ரும்பொழு தருள்வோனே.

வருகா னத்தே பற்றுக வந்தனை
விழவா ளிட்டே வெட்டிய வன்றுதி
வழுவா மைக்கே ரட்சைத ருங்க்ருபை ரகுநாதா

வளரா னைக்கா லட்சிமி யும்பிற
விடவோ டிப்பூ ரட்சக னென்றொரு
மணிமா டக்கோ யிற்பதி வந்தருள் பெருமாளே. (௯0)

சுவாமி - நந்தாவிளக்குப்பெருமாள். தாயார் - அம்புஜவல்லி.
காவிரியின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

---

## திருவைகுந்தவிண்ணகரம். (௩௧.)

தையந்த தன்னன தத்தன
தையந்த தன்னன தத்தன தந்தன
தையந்த தன்னன தத்தன தந்தன—தனதான.

மெய்கண்ட முன்னைம றைப்பொருள் கொண்டன
கல்லென்ற மின்னையு ருப்பட நின்றன
மெல்லஞ்ச வல்லவ னைத்தொர் த்ரியம்பக மெனுமேலாம்

வில்லொன்று தன்னைமு றித்துநி மிர்ந்தன
  வையங்கள் விண்ணுல கத்தொட ளந்தன
  வெல்கின்ற வன்மைய ரக்கரை வென்றன — பரதாழ்வார்

செய்கின்ற மண்ணர சிற்குமு யர்ந்தன
  மல்லென்ற வொன்னல கைக்கொலை கண்டன
  தெய்வங்கள் சென்னிமு டிக்கணி கின்றன — தொலையாத

செல்வங்க டம்மடி யர்க்கருள் கின்றன
  புள்ளொன்று சின்னபி னப்பட வென்றெதிர்
  செல்கின்ற நின்னரு மைப்பத பங்கய — மறிவரார்

கைகொண்டு பின்னிய டைத்தநெ டும்படல்
  மெல்லென்று துன்னியெ டுத்துந றைந்துபின்
  கள்ளன்செய் தன்மைநி னைத்துறி கொண்டுயர் — குடமீதே

கல்லொன்றை யுன்னியி லக்கிலெ றிந்தழி
  நெய்யுண்டு வெண்ணெய் திரட்டிவி ழுங்கிய
  கள்ளங்க டம்மை யயிர்கிடை மங்கைய — ரவர்சேர

வைகின்ற தென்னவு னைக்கள்வ னென்றவர்
  சொல்கின்ற தென்னவு னக்கும டந்தையர்
  வல்லங்க மென்னவு ரைத்திடு கென்றனை — முனிபோது

மையுண்டு கண்ணைபு றைத்திடு கின்றவ
  கைகின்ற வென்னையி ரட்சைபு ரிந்தவ
  வைகுந்த விண்ணக ரத்திலி ருந்தருள் — பெருமாளே. (௬௪)

**சுவாமி - வைகுந்தநாதர். தாயார் - வைகுந்தமங்கை.**

**காவிரியின் வடகரையி லுள்ளது. திருமங்கையாழ்வார்**

**மங்களாசாசனம்.**

---

## திருவரிமேயவிண்ணகரம். (௩௨)

தனதான தன்னதன தானதத் தனதந்த
தானதன தந்ததன தானதன தந்ததன
தனதான தன்னதன தானதத் தனதந்த
தானதன தந்ததன தானதன தந்ததன
தனதான தன்னதன தானதத் தனதந்த
தானதன தந்ததன தானதன தந்ததன—தனதான.

வருபாவ மென்னசெயு நீசகத் திரிசங்கை
வேதியனு யர்ந்தகதி யேவினனி றைந்துலவு
கலிதோட மென்னசெயு வேதமூ த் தமிழ்கண்ட
பேர்பதின்ம ருங்கடவு ளாயிவண மர்ந்தனரவ்
வபசார மென்னசெயு மாதுபக் கலில்வந்த
காகசுர னுங்கிருபை மேவினன தன்றியர - வெரிவாள்வேல்

மலைநீரு மென்னசெயும் ராசதக் கனகன்றன்
மாமதலை முந்துதன தாயுளின் மிகுந்தனனே
யமவாதை யென்னசெயு மாதவர்க் கவர்மைந்தர்
போனவரை நன்கிறெடு மீளவரு கென்றனைதுன்
மதகோப மென்னசெயும் ராசவுத் தமனம்ப [தே
ரீடன்முறை கண்டுதரு வாசனைவெகுண்டவன் -னிதலா

ப்ரமசாப மென்னசெயும் யாதவுத் தவன்மங்கி
டாமலவ னன்றுமுதல் வாழவரு டந்தனையோர்
ப்ரமபாண மென்னசெயு மாள்பரீட் சிதையின்பி
ஞேடுலக மென்றுமர சாளவிரு வென்றனைமொய்
ப்ரமமாயை யென்னசெயு நீயிடைச் சிறுமைந்தர் [ல்
யாவருமலைந்தொழிகி லாதருள்பு ரிந்தனைபல்-வசையேசொ

பிழையான் தென்னசெயும் வாதில்வக் கிரனும்ப
ரோகதிய டைந்துசிசு பாலனுமு னுய்ந்தனன்வல்
விடமான தென்னசெயு மாதுருத் திரனந்த
வேளையிலி றந்துமுடி யாதருள்பு ரிந்தனைபி
றவிமாயை யென்னசெயு நீநினைத் தெனையன்பி [யாமோ
னோடுரிய தொண்டனென வேயடிமை கொண்டிடில-தனை

இருஞாலம் விண்ணரசு தானடத் தியவஞ்ச
னிரணி யன்றனது மாமகனை நம்பினொடு
மிரண்யாய வென்னவென வாய்புதைத் ததுவென்சொல்
கூறுவதொ ழிந்தரிக மோவெனமொ ழிந்திடலு
மிவனார்கொல் சொன்னதெவ ரோவுரைத் திடுகென்று [தில்
சீறியழல் கின்றவெகு கோபமது பொங்கியெழ - முனிபோ

இருளாகி மின்னும்வெளி யாகியுட் பொருளந்த
மாதியகி லண்டநிறை வாகியதி னின்றுணர்வி
னுணர்வாகி யன்னபய னாகியுட் சமயங்க
ளாகியனு வொன்றுசத கூறிடும ரும்பொருளி
னிடையாகி யுண்மைநெறி யானவத் தவனெங்கு
மாகியுள னிங்குமுள தானுளனெ னக்கருது-கெனவேதான்

அருளோடு சொன்னமொழி தானுருக் கியசெம்பு
காதிற்பு குந்துநனி பாய்வதென வெம்பியறை
திறிகீறு முன்னம்தி கோபவுக் ரமசிங்க
மாகியெதிர் கொண்டவனை மார்பிடைபி ளந்துசிவ
னவனான திண்ணமிர்க தாமதச் சரபம்ப
கீரெனவெ குண்டுதலை கீழ்படிபு ரண்டிடவு-முதைவோனே

அடல்வாளை விண்ணினிடை யேகுதித் தவணின்ற
தாழைமடல் விண்டுசிறு பாளைமட லின்கமுகு

குலையோடு சென்னபின மாயுதிர்த் திடமண்டி
வாலறைதொ றுந்தரள மேயுதிர்வ ளந்திகழு
மரிமேய விண்ணகர மேவலுற் றிருமங்கை
மாரிருபுறந் திகழ வாழ்வுடனி ருந்துவளர்-பெருமாளே. ()

ஸ்வாமி-கூடமாடிய கூத்தர். தாயார்-விழியமுதவல்லி. காவிரியின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருத்தேவனூர்த்தொகை. (ருரு)

தனத்தான தானன தான தானன
தனத்தான தானன தான தானன
தனத்தான தானன தான தானன—தனதான.

மகத்வாதி பூதச கார ணாதனி
யுனைச்சேரு வோர்கள்வி கார மாறையும்
மறுப்போர்க ளாகிலி நீச னுலகது வசமாமோ

மடத்தோகை யாகிய மாத ராரவர்
தமக்காசை யோவவர் நாடு வோரிடை
மனக்ரோத மோவிதை யீகெ னுவெதிர் வருவோர்மேல்

மிகப்பாயு மாகன லோப மோவிது
படைத்தோமெ னுவெகு மோக மோவிதில்
மிகுத்தோமெ னுமத மான தோபிறர் குடிகேடு

விளைப்போமெ னுவல்பொ றாமை யோபிற
விதொட்டே விடாதுள காம மேமுதல்
விடப்போற தார்விடு மாறு நீயெனை யருள்வாயே

சுகப்பேரு ளானொடு ஸ்னேக மோகன
பரத்வாச நாரத வ்யாச மாசுக
குலப்ப்ராப காபர காலர் வாய்மொழி யுடையோனே

குணச்சாதுர் யாகவு மாரகோசிக
சுகக்க்யாப காரகு ராம வாமன
குருத்த்ரோக மாமது பான காமவி மிசையாதி

செகத்பாப நாசத யாப ராதுரௌ
பதிக்காபி மானச கோத ராவர
திவச்சூர்ய கோடிபிர காசி தாவெனை யருள்வோனே

சிருட்யாதி பேதச கோதை யாபர
ப்ரமக்க்யான மோனம னேக ராவொரு
திருத்தேவ னூர்தொகை மாத வாசூரர் பெருமாளே. (௩௩)

சுவாமி :- மாதவப்பெருமாள். நாயார் - க்ஷீராப்திவல்லி.
காவிரியின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

---

திருவண்புருடோத்தமம். (௩௪.)

தனதாத் தனதந் தனதன தான
தனதாத் தனதந் தனதன தான
தனதாத் தனதந் தனதன தான—தனதான.

உலகாக் கியாள்கின் றவர்களை யோரோர்
திரிமூர்த் தியாமங் கவரினுண் மேன்மை
யொருமூர்த் தியாமங் கவரெவ ராகு மெனின்மாலா

முனையோற் றமாகின் றுரைசெய்வ ராகி
லெவர்சாட் சியாமென் றிடின்மத யானை
யொருசாட் சியாமன் றியும்வெகு கால மறைபேசும்

அலர்தீர்க் கயாகந் தனில்ருடி தேவ
ரெதெதார்த் தமாவன் றுரைசெய்த வாய்மை
யதுசாட் சியாநஞ் சகனுரை வேத முதலீறு

மவைசாட் சியாமிங் கிவையறி யாது
பரமார்த் தமாய்நின் றனைபகர் காலை
யதுமாத் ரமோநின் செயல்வெகு வாகு மறிவாரார்

பலசாத் ரமாமந் திரதவ மேவு
மதகோட் டியாருஞ் சிதறிட வேக
பரமாத் மனீயென் றுரைசெய்து வேத முடியாவும்

பயில்பாஷ் யமேகண் டருள்புரி ஞான
சிரிபாஷ் யகாரன் பரவிய பாத
பரமேட் டியேவஞ் சகனெனை யாளு நினைவோடே

புலவோர்க் குவேதந் தமிழெனை வேசெய்
குருகூர்க் குள்வாழுந் திருமகிழ் மாறர்
புகழ்நீர்த் தனேபங் கயமுக சேவை யருள்வாயே

புனல்காற் றிஞேடம் புவியழல் வான
மெனவாத் தபூதந் தொறுநிறை வான
புருடோத் தமாவண் புருடையில் வீறு—பெருமாளே. (நடச)

சுவாமி - புருஷோத்தமர். தாயார் - புருஷோத்தமவல்லி.
காவிரியின்வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

---

## திருச்செம்பொன்செய்கோயில். (நரு.)

தந்தந்த தானதன தந்ததன தந்ததன
தந்தந்த தானதன தந்ததன தந்ததன
தந்தந்த தானதன தந்ததன தந்ததன—தனதானு.

மந்தங்க ளானமன சொன்றுவினை ரண்டுகர
ணம்பந்தி மூணிருப தென்றதனில் விஞ்சியம
னம்பங்கி ஞலுபொறி யைந்துபுல னைந்திெனுடு துர்விகார

வஞ்சங்க ளாறுமுட னின்றுவள ரும்பகையி
டங்கொண்ட வீடுதகை யென்புதிர மூங்குழுமி
மண்டுந்த டாசநெளி யும்புழுவி ழுங்குழிமொய் வெகுரோம

பந்தங்கொள் காயுயிர்வி டும்பொழுது தந்தைபரி
யந்தந்தொ டாதபிணை மிங்கிதுசு மந்துபடு [று.
பண்பொன்று மோகமூவி நன்றுபத னஞ்செயினு முடைநா

பங்கங்க ளோமலநி ரம்பியகு டங்கரவ
கந்தங்க ளோகடின மென்செய்வது டம்பனுப
வஞ்சிந்தி யாதுனது பங்கயப தம்பணிய வருள்வாயே

நந்தந்த வேளைசம யங்களவை கண்டுதெ
கண்கண்ட தேவுமுனை யன்றியிலை யென்றுனத
ரண்கொண்டு ளோர்நமுசி சம்பரனெ னும்பகைஞ-ரவராலே

யண்டங்கள் யாவையுமலைந்தமர ருங்குலைகு
லைந்திந்தி ராதியரு நொந்துனைவ ணங்கவத
றிந்தஞ்ச னீரெனமொ ழிந்தவர்செ யங்கொளரி தெனநீதி

ந்துங்க்ரு பாரசனை கொண்டவர்பி ரிந்துசிவ
சம்பந்த மாகவழி கண்டவரை வென்றபசெ
யங்கொண்ட வானவர்க ளிந்த்ரபத முங்கிருபை-புரிவோனே

தெண்கங்கை நீர்புரைத டம்புடைகி டந்துசுரி
சங்கங்கள் கோடிமணி சிந்தியவ ளம்பெருகு [ளே.
செம்பொன்செய் கோயினக ரந்தழைய நின்றுவளர்-பெருமா

சுவாமி - பேரருளாளப்பெருமான் . தாயார் - அல்லிமலர்மங்கை.

காவிரியின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்

மங்களாசாசனம்.

## திருத்தேற்றியம்பலம். (௩௬)

தத்தத் தனந்தன தத்தத் தனந்தன
தத்தத் தனந்தன தத்தத் தனந்தன
தத்தத் தனந்தன தத்தத் தனந்தன—தனதான.

சூட்டக் குணங்களொட கப்பற் றமொன்றியபு
றப்பற் றமென்றிருவ கைப்பற் றநெஞ்சிடைசு
கப்பட் டிருந்தொறுவ யிற்றுக் கிரந்துபெறு மிரையாலே

சுற்றித் திரிந்துபல ரைப்பற் றிநின்றவர்கள்
கைக்குட் படுந்திரவி யத்துக் கிரங்கிவெரு
ளர்ப்புத் திகொண்டுளம யக்கிச் சகங்கள்பல விதமோதி

இட்டத் தனம்பெறுப ரத்தைப் பெதும்பையர்கள்
கற்புத் தனஞ்சொலுவ தொப்பப் பகுந்தறிவெ
டுத்துப் ரசங்கமது ரைத்துத் தரங்கள்சொலி நிதிதேடி

யெய்த்திட் டுமங்கையர்வ சப்பட்டு வம்பினிலு
ழைத்திட் டுபொங்குகொடு மைப்பட் டவஞ்சகனி
ரட்சைப் படும்படியுன் ரட்சைத் திறங்கள்சில புரிவாயே

மட்டிட் டகண்டமொடு சக்ரப் ரசண்டகிரி
முட்டக் குலைந்துபொடி பட்டுத் தகர்ந்திடவ
ளைத்திட் டடுஞ்சமர்வி ளைத்திட் டிலங்கைநகர் பொடியாக

வைக்கப் புகுந்தெரிகொ ளுத்தித் திரும்பியுன
பற்பப் பதங்கடொழும் ருத்ரத் திரங்கொளனு
மற்குப் ப்ரியங்கொடுப்ர மப்பட் டமுங்கண்விபி டணரான

சிட்டர்க் கிலங்கைநக ரிற்பட்ட முங்கருணை
யிற்சக்ரி பண்பழைய நற்பட் டமுங்குலிச
சித்ரத் தனிந்த்ரநக ரிற்பட் டமுங்கிருபை புரிவோனே

செச்சைப் போலன்சிகர ரத்னக் கணங்கொள்மணி
முற்றத் தலங்களரு ணப்பொற் பிலங்கியதி
ருத்தெற் றியம்பலாக கர்க்குட் டினங்கண்வளர்-பெருமாளே. ()

சுவாமி - செங்கண்மால். தாயார் - செங்கமலவல்லி.
காவிரியின் வடகரையி லுள்ளது. திருமங்கையாழ்வார்.
மங்களாசாசனம்.

---

## திருமணிக்கூடம். (ரு௭.)

தந்தன தத்தா தத்தன தந்தன
தந்தன தத்தா தத்தன தந்தன
தந்தன தத்தா தத்தன தந்தன—தனதான.

உந்தியி லுற்றே ருனுக்கும வன்றலை
மண்டையி ரப்பா ளற்குமி ரண்டில
குண்டுனை டிக்கீழ் பட்டவ ளந்தநி லுலகேழு

முண்டரு ளக்கா லத்திலி ரங்கியு
மிழ்ந்தவி டப்போ மெச்சிலெ னுந்தெய்வ
மொன்றால விப்பூ மிக்கு ளடங்கிய வுயிர்யாவும்

இந்தவு யிர்க்கா திக்கப தங்களு
முன்பு கொடுத்தே ரட்சைபு ரிந்தனை
யிங்கினுவ விட்டே சட்சம யங்களின் விதமாகி

வென்றெய்வ மிக்கா மிக்கிலை யுன்றெய்வ
மென்று பிடித்தே தர்க்கமி டும்பர
ரெந்தவி தத்தா லெப்படி யுன்பத மடைவாரோ

மந்திர வித்தாய் வித்துள டங்கிமு
ளைந்துத ளிர்த்தே முக்கவ டங்கதில்
வந்து முளைத்தே கப்புமி கும்பல பலவாகி

மண்டல முட்பூ தத்தொகை யெங்குநி
றைந்தொரு சித்தா சித்தென விஞ்சிய
மன்பதை கட்கே மூக்யப யன்றரு நெடுமாலே

அந்தவி ருட்சா துச்சட லன்கள்வி
ரும்பிய ருத்ரா திப்ப்ரம னிந்திர
னண்டர்து வக்கோ னக்கன கன்சுதன் விசயோனீ

ளங்கத சுக்ரீ பற்குமி லங்கையர்
தம்பிய ருக்கே பட்டம்வ ழங்கிய
வம்பொன்ம ணிக்கூ டத்தினி னின்றருள்—பெருமாளே.()

சுவாமி - மணிக்கூடநாயகர். தாயார் - மணிக்கூடவல்லி.
காவிரியின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

---

## திருக்காவளம்பாடி. (௫௮.)

தனனதன தாந்தான தந்தான தான
தனனதன தாந்தான தந்தான தான
தனனதன தாந்தான தந்தான தான—தனதானு.

இரவிமனு மாந்தாது வென்றுதி நாளி
லுலகமுழு தாண்டாரி றந்தார லாம
லிதுவரையும் வாழ்ந்தாரி ருந்தாரொ ருவொர் மொழிகேளே

மினியசெல்வ மாம்போத லங்கார மாகு
மதில்சிறிது போம்போத லங்கோல மாகு
மினியிதென சாங்கால மொன்றேமெய் யாகு மதலாலே

ருவுடல மாம்பூத மைந்தாகு மாகில்
வருணமிதி ஞன்காம தன்பேத மேது
கடவுளொரு மூன்றுரு மந்த்ராதி பேத மயமான

கனதுயரெலாங்கூடி ரண்டாகு மீதி
லகரமுத லோங்கார மொன்ருகும் யாவர்
கருதவசம் யான்பாவி யென்ருலு நீகை விடலாமோ

அருமறைசொல் சாந்தீப னன்பாக வேயென்
ஞெருமகவை யீந்தாளு மென்றேப ராவ
வருள்புரிப்ர மாண்டாதி சந்தோட நேச
யடவிதரு காண்டாவ னந்தீயின் மூடி
யெரியவெரி தூண்டாதி சங்க்ராம சூர
வடியனெனை யாண்டாய ரங்காவி ஞோர்கள் பெருமானே

வரியளிகள் கூாந்தாரம் விண்டாசு பாட
மடனறிய பூந்தாழை யம்பாளை யூறு
மதுரமெழு தேன்சாறு டைந்தாறு பாய வெதிரேறி
மதகினிடை மீன்பாய மண்டேகம் வேரி
மலரின்மிசை பாய்ந்தேற செஞ்சாலி வேலி
வளமருவு பூங்காவ ளம்பாடி மேவு பெருமாளே. (நஅ)

சுவாமி-கோபால கிருஷ்ணர். தாயார்-மடவரன் மங்கை நாச்சியார்.
காவிரியின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

---

## திருவெள்ளக்குளம். (ஙக)

தையத் தனத்ததன தையத் தனத்ததன
தையத் தனத்ததன—தனதான.

அல்லைப் பழித்தகுழல் வில்லைக் குழைத்தநுத
லல்கற் சிறுத்தவிடை முனிவோரை
யல்லற் படுத்துமொழி முல்லைக் கெடுத்தநகை
யையைப் படைத்தவிழி மடவார்கள்.

தொல்லைப் படுத்தவவர் மையற் கடுத்தினிது
துள்ளிக் களித்ததனி — லுழலாதே
தொல்லட் சரப்பொருளை யுள்ளத் திருத்தும்வகை
சொல்லித் திருத்தியெனை — யருள்வாயே
மல்லைக் கெடுத்துவரு புள்ளைக் கிழித்துவலை
மல்லிட்ட வக்கிரனை — விழமோதி
வல்லுக் கிரப்பகைஞர் பொய்யைத் துரத்திமுழு
வையத் தைரட்சைபுரி — நெடுமாலே
வில்லைச் சடைப்பரனு மல்லிப் பொருட்டயனும்
வெள்ளிப் பகட்டவனு — மெதிராடி
வெள்கித் துதிப்பவருள் செய்வித் தகப்பரம
வெள்ளக் குளத்தில் வளர் — பெருமாளே. (௯௯)

சுவாமி - கண்ணர் ஸ்ரீநிவாசர். தாயார் - பூவார்திருமகள்.
காவிரியின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

---

### திருப்பார்த்தன்பள்ளி. (௯0)

தனனதன தனனதன தாத்தந்தைய் தான
தனனதன தனனதன தாத்தந்தைய தான
தனனதன தனனதன தாத்தந்தைய தான—தனதானு.

குருடனெனி லொளியினொளி யார்ப்பெண்செய்யு மூடு
செவிடனெனி லிசையொழுகு பாட்டென்செய்யு மூகை
குழறனெனி லரியமறைவாக்கென்செய்யுநோய்கொள் சுரமான
குடிலனெனி லமுதரச நேர்ப்பென்செய்யு மாதி
குறைமுடவ னெனினடன கூத்தென்செய்யும் யானோர்
கொடியனெனி லுனதுநற்கடாட்சஞ்செய்வதேது-க்ருபைதானி

கருதிலரி தலைவெகிழி மாற்றஞ்சொல்லு தேகல்
விடைகுழிய வொழுகுபுனல் சேட்டஞ்செய்யு தேகொல் [ல
கரிகள்பல கவிகள்சொன மாத்ரஞ்செய்யுமேயொல்-விலைபோ

கபடனெனை யுனதடிமை யாக்கொண்டெனு·ளூறு
மிருளறவு னருளொளிகள் காட்டுந்துய்ய பாத [வாழ்
கமலமென தலையின்மிசை போக்யஞ்செய்யு மாறு - தயைகூர்

அருவரைக ளெறநெறென நீட்டுங்கைக ளோடு
கடகரிகள் கிடுகிடென வோட்டந்துள்ளி யேறு
மசுரர்படை மடமடென வோட்டஞ்செய்ய வாடு சமரூடே

யலைகதிமி திமெனநனி யாட்டஞ்செய்யு நாய்கள்
நரிகள்பட படெனவெகு கூட்டங்கொள்ள வாளி
யழலுமொழு மொழெனமுனி பூட்டுந்திவ்ய வீர ரகுராமா

பருவமழ லுமிழும்விட மூட்டும்பைய ராவி
னிடநடன சிரமபத நாட்டுஞ்செல்வ னேபல்
பரசமய குலகலக மாக்குங்கள்வ னேயெம் முரவோனே

பரியமுகை விரியமலர் பூக்கும்பொய்கை யேறி
முடவியெர்மு குடவளைக ளூற்றங்கொல்லை யான
பழனவள வயலினுகள்பார்த்தன்பள்ளிமேவுபெருமாளே.(சo)

சுவாமி - தாமரையாள்கேள்வர். தாயார் - தாமரைநாயகி.
காவேரியின் வடகரையிலுள்ளது. திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

சோழநாடு முற்றிற்று.

# பாண்டிநாட்டுத் திருப்பதிகள். (கஅ)

## திருமாலிருஞ் சோலைமலை. (க)

தானதந் தானதன தானதந் தனன
தானதந் தானதன தானதந் தனன
தானதந் தானதன தானதந் தனன—தனதானா.

ஆனையின் றோலமிட வோடிவந் ததவும்
வேலகமன் றோடியி னுலனந் ததவு
மாலமுண் டோணிரவு தீரனின் றதவும் விசையோன்முன்
னதியஞ் சோதிவடி வேபொலிந் ததவு
நாரதன் காணரிய மாய்கைகண் டதவு
மாமையொன் றுயகில மேழ்சுமந் ததவு முயர்வான
ஞானம்வந் தேதருவ னுர்மொழிந் தபடி
தேவருந் தேடரிய பேறுதந் ததவும்
ஞாலமுண் டாருயிரெ லாமுமிழ்ந் ததவு முமிழாயேல்
நானெனுந் தேவுமிலை யானதுந் தெரியில்
யாதுநின் பாதமல வேறுநம் பியுயர்
நாடிழந் தேகரகில் வீழுமன் பனைக ளறிவேதோ
தானைதிண் டாடசம ருபெஞ் சவர்கள்
பாரதம் போர்செய்துரி யோதனன் படைக
டாமுறிந் தோடவிச யாகிபன் ப்ரபல னெனுமேன்மை
தானகன் றேப்ரமக பாலமுண் டிடவொ
ராழியொன் றேபொருது நீதிகண் டேதன {னே
தாண்மையுண் டோவெனவொர் பாகனென் றிரதம்- விடுவோ
மானசந் தேர்டபர னேசவுந் தரசை
யோகசம் போகதர னேபரம் பரம
மாலலங் காரமுகி லேவிரும் பியெனை யருள்வோனே

மாநிலம் பிரவமற வீழ்தருந் திவிய
பாதகங் காசலம தேயரும் புதிரு
மாலிருஞ் சோலைமலை தாழநின் றுவள்ர் பெருமானே. (சக)

சுவாமி - மாலலங்காரர் அழகர். தாயார் - சௌந்தரவல்லி.
நம்மாழ்வார் குலசேகராழ்வார் பெரியாழ்வார்
திருமங்கையாழ்வார் ஆண்டாள்
மங்களாசாசனம்.

---

## திருக்கோட்டியூர். (உ)

தத்தனு தானன தாத்த தானன
தத்தனு தானன தாத்த தானன
தத்தனு தானன தாத்த தானன—தனதானு.

நட்டதே காதியை யோக்ய மாகநி
னைத்துநா ளுவகை பார்த்து நீரின
னைத்துமே லேசுசி யாக்கி நாடொறு மினிதயே
நட்பினே மோகன சூட்டொ டாழிப
தக்கநாண் மாலைகள் பூட்டி யாருந
கைத்திடா தேயழ காக்கு வாருயிர் விடுபோது

கிட்டவா ராண்மனை யாட்டி தான்முத
னக்கவே நாய்நரி காக்கை யோடுகி
டக்கவே பஃறுபுற மேற்ற கோலமு மழகாமோ
கெற்பமீ தேயுல காத்மம் யாவும்வ
ளர்த்ததாய் நீயென வாழ்த்தும் வாழ்வுகி
டைக்குமோ னேதய மாத்ர மேபெரி தழகாமே

மட்டிலா நான்மறை சாத்ர மாறும்வ
டித்துநா லாயிர மாக்கி லீலைவ
ரப்பின்மே லாகிய மூர்த்தி மூவரின் முதலாய

வத்துநீ யாமென வாக்ய மேசெய்து
முத்தராழ் வார்கள்பி ராப்ய மாகவ
மூத்துபா மாலைகள் சூட்டு வோயெமை யுடையோனே

துட்டவா ளசுர யோக்ய வீழ்சர
ஆற்றகா காசுர போக்ய சூனிய
தூக்ககா பாலிக சாக்ய வாதியர் குலகாலா

சுத்தரா மாயண தோத்ர வேதச
வுக்யபா ராயண சூத்ர பூரண
சொக்கநா ராயண கோட்டி யூர்வளர் பெருமாளே. (௬௨)

சுவாமி - சௌம்யநாராயணர். தாயார் - திருமாமகள்.
பூதத்தாழ்வார் பேயாழ்வார் திருமழிசையாழ்வார் பெரியாழ்வார்
திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருமெய்யம். (௬௩)

தான தானதன தைய தானதன
தான தானதன தைய தானதன
தான தானதன தைய தானதன—தனத ௌ.

தாவி லாதசிறு பிள்ளை யானதுகற்
கூவ மீதிலரு குள்ள போதிலொரு
தாயை யேவசைகள் சொல்லு வாரழுவி னருகேதான்

சார வோரிலகு செய்ய பூவெனநல்
மோக மாய்மகவு துள்ளி யோடிவனை
தாழு மோகருணை செய்கி லாதுகொடி யிலைபோல

பாவி நானொருவ னல்லெ னோநரகில்
வீழ்கி லாதமுனை யைய கோகிருபை
பாவி யாதுவிடி னல்ல தோவுனருள் வசையாமே

பாலன் மீதுக்ருபை யில்லை யோவலது
நீய லாமலொரு தெய்வ மாரிதென
பார மோவடிமை கொள்ள வேதயவு புரிவாயே

பூவி ரூன்முகனும் வெள்ளை வாரணனு
மூடு நீடுசடை வள்ள லாருமனு
போக பூமியினி லுள்ள தேவர்களு முடனுன

போதில் யானைவெகு தொல்லை யாகியதி
லாதி மூலம்வர வுள்ளி யோதுமொழி
போது ருதமுனம் வெள்கி வானவூர்க ளவர்சேர

யாவர் யாவரிது சொல்லு மூலமிதில்
யாமு நீருமெலம் வல்ல ராரெனுமுன்
யானெ னுவெதிரிற் செல்லு நாதக்ருபை யுடையோனே

ராம ராமசெய மெய்ய னேயினமு
தான பேரமுத வெள்ள மேபரசர்
வேச நேசதிரு மெய்ய மேவிவளர் பெருமானே. (சுகூ)

சுவாமி - சத்தியகிரிநாதர். தாயார் - உய்யவந்தாள்.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

திருப்புல்லாணி. (சு)

தனத்த தானதன தானன தந்தன
தனத்த தானதன தானன தந்தன
தனத்த தானதன தானன தந்தன—தனதான.

கிளைக்கி லாதுரவ கோடியி லங்கையின்
மிசைச்சி வாலயமு னேசெய்து வஞ்சக
கிளைத்த ராவணசு மாலிப வுண்டர ரடல்வாண்

னிகழ்ச்சி யாமிரணி யாசுர கஞ்சரோர்
தயித்திய வாலியொடு மாலிச லந்தர
னிலத்தி னேமுனம்வி ராதவ ணங்கலன் [முதலோர்கள்

உனக்கு ளாகியவி பீஷண னிந்திரன்
வசிட்ட வ்யாசர்தொல்ப ராசர ரண்டர்க
ளுலப்பி லாதப்ரக லாதன ரிங்கிவர் முறைகூறி

ஒரச்சை வாகமர்கள் யாருமு டிந்தனர்
வயிட்ண வாகமர்கள் யாருமு டிந்தில
ரொருத்த ரோவிலையு பாயம றிந்துனை நினைவாரே

மனத்த வாவொடுமு னிளினி லிந்திரன்
முடிக்கும் யாகமுடி யாதகி தஞ்செய்து
மறுக்க வானவர்ம யேசனு டன்சொல வவன்மீறி

மதித்த யாகமடு போதினி லிந்திர
னுனைப்ப ராவவட லாழி யெறிந்தனை
வதைக்க வேசெய்துயிர் பார்வதி கும்பிட வருள்வோனே

சினத்த வாளரியெ னுவிரண் யன்சிவ
பரத்வ வாதனைசெய் போதவன் முன்பெதிர்
சிரித்து லாவுவிஸ்வ ரூபமு டன்றறி வருவோனே

திருத்து ழாயினொடு மார்பினி லங்கிய
கவுத்து வாபரண சோபித சம்ப்ரம
திருப்பு லாணிநகர் வாழவு கந்தருள் பெருமாளே. (௨௪)

சுவாமி - தெய்வச்சிலையர் கல்யாண ஜகந்நாதர். தாயார்
தெய்வச்சிலைநாச்சியார். திருமங்கையாழ்வார்
மங்களாசாசனம்.

---

## திருத்தண்காலூர். (ரு)

(இதைத் திருவரதுணமங்கை என்றும் கூறுவர்.)

தனத்த தானன தனதந்த தானன
தனத்த தானன தனதந்த தானன
தனத்த தானன தனதந்த தானன—தனதான.

சகத்தி லாசைகள் வருமென்று போயொரு
வனத்தி லாதிப ரதனென்ற மாமுனி
தவத்தின் மானது தனைநம்பி வீடின னதலாலே

சலத்தி லேசவு பரியென்ற மாமுனி
குளித்து மாதவ சுபுரிந்து மேதகு
சவுக்ய மாய்வரு கயல்கண்டு மாறின னதனாலே

அகிர்த்ய மேதற வறமன்றி வேறிலை
கிடைக்கு மோதிரு வடிவம்பி லேசில
ரவத்த மாகிய தருமங்க ளாலலை குவர்மோக

வனித்ய மாய்கைய துகளைந்து ஞானமுள்
ளடக்கி நானென தெனும்ரண்டு பேதமு
மறுத்த போதல தினியெந்த வாறுனை யடைவார்கள்

மிகுத்த நான்மறை யினைவிந்தை யாகிய
தமிழ்ச்சொ லாயிரம் வடிகொண்ட நீடிரு
விருத்த நூலொரு தமிழந்த மாதிசெய் யொருநூலும்

விளைத்த வாசிரி யமதென்ற வேழுமிவ்
விதத்தி லேயுரை செய்துநங்கை பாலகர்
விதித்த பாவெனு மணிதொங்கல் சூடிய நெடுமாலே

செகற்ப ராபர சவுகந்த நாயக
பரத்வ காரண வகிலண்ட பூரண
திருட்டி யாதிய நயனங்க ளேபுரி பெருமானே.

திவ்யப்ர பாமரு டவலங்க்ரு தாசெய
சரித்ர சீதர வரவிந்த லோசன
செழித்து வாழ்வர குணமங்கை மேவிய-பெருமாளே.(௪௫)

சுவாமி - தண்காலப்பன். தாயார் - அன்னநாயகி.
திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

திருமோகூர். (௬)

தனனு தத்தன தானன தந்தன
தனனு தத்தன தானன தந்தன
தனனு தத்தன தானன தந்தன—தனதான

அடுபோ ரட்டதி சாகச பந்திகள்
பொருகோ டற்றடி யோடுமு றிந்திட
வயில்வாள் பட்டவை வாய்கண் மடிந்திட விடமூறு

மடல்சே ரட்டம நாகம்வெ குண்டுபற்
கடிவாய் புத்தமு தாறு சொரிந்திட
வழல்வா யக்கினி நீரின ளிர்ந்திட விதலாதே

உடலோ டக்கடல் வாயின டைந்தகன்
மலைமீயா தெப்பமெ னுமிசை கொண்டிட
வொழியா மற்பகை யாவும்வ ளைந்தன தொடராதே

யொருபா லற்கரு ளேகனி தந்தவுன்
னிருநா லக்கர மேன்மைய டங்கவு
மொருநா விட்டடி யேனுரை தந்திட வசமாமோ

வடவா வக்கினி சீறியெ ழுந்தபின்
னிலநீ ரக்கினி வாயுவி சும்பென
வளர்பூ தத்தொகை யாவும ழிந்துக முடிநா

வடவர் லிற்சிறு சாகையி னந்தனி
ரணைமீ திற்பதி னுலு கங்களும்
வயிறு றச்சிறு பாலனெ னும்படி துயில்வோனே
செடநீ றிட்டருண் ஞானப ரம்பரர்
வளர்சே டப்புளி நீழலி ருந்தவர்
திருவே தப்பொரு ளாயிரம் விண்டடி தொழுமாலே
சிறைகோ தப்பெரு நாறையி னஞ்சிறு
பெடைநா ரைக்கிரை தேடிவி ரைந்திடு
திருமோ கைப்பதி வாழவி ளங்கிய பெருமாளே. (௨௬)

சுவாமி - காளமேகப்பெருமாள். தாயார் - மேகவல்லி.
நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

திருக்கூடல். (தென்மதுரை) (எ)

தனன தானன தத்தன தந்தன
தனன தானன தத்தன தந்தன
தனன தானன தத்தன தந்தன—தனதானா.

ஒலியி னுலர வீட்டிமெ லிந்தது
பரிசி னுல்கர டக்கரி நொந்தது
வொளியி னுல்விழும் விட்டினம டிந்ததோ ரளிதானோ
ஷரிய வாசனை யிற்கெடு கின்றது
சுவையி னுல்வரு மச்சம ழுந்தது
வொருவ ராலுமொ ழிக்கரி திந்த்ரிய மதலாதே
கலியை யாவர்க டக்கவ சஞ்செக
பிரம கீடவ ரைக்கும்வி ழுங்கின
கபட நாடக மிப்படி நின்செய லறிவேனோ

ககன கோடிதி ருட்டியி லிங்கொரு
வனுவெ னூலுணர் வெப்படி நின்புகழ்
கருது மாறெவ னிக்கதி கண்டெனை யருள்வாயே

இல்கு வார்சடை மூக்கண னஞ்சனை
சிறுவ னாகிவ ழுத்தவ னந்தனு
மிளவ லாயிடை நிற்கவொர் சங்கொடு சடாரி

இருவ ரூழிய முற்ற விரிஞ்சனொர்
கர்டி ராசனெ னத்தொழ வங்கத
னனவை வாள்கொடு நிற்றலு மிந்திர னடிதாழ

மலியும் வானவர் சூற்றம டங்கலு
மரிக ளாயவ ருக்கிறை யென்றதில்
வரிசை யாகிய ருக்கனி றைஞ்சநல் லரசாகி

மருவர் காணவி ரட்சக னென்றொரு
விசுவ ரூபமெ டுத்தப ரம்பர
மதுரை மாநகர த்திலி ருந்தருள் பெருமாளே. (௪௭)

சுவாமி - கூடலழகர். தாயார் - வகுளவல்லிநாச்சியார்.
திருமழிசையாழ்வார் பெரியாழ்வார் திருமங்கையாழ்வார்
ஆண்டாள் மங்களாசாசனம்.

---

## ஸ்ரீவில்லிபுத்தூர். (புதுவை) (அ)

தானத்தன தானன தந்தன
தானத்தன தானன தந்தன
தானத்தன தானன தந்தன—தனதான.

ஓமப்பெல ராவண னொந்தது
காமத்தினி னீள்கன கன்செய்கு
ரோதத்தினின் மாழ்கினன் முன்குரு குலராசன்

லோபத்தினில் வீடின னம்பரமர்
மோகத்தினில் வாடினர் சங்கர
ரோமத்தினி லோடினர் கஞ்சனு மறியாமல்

ஆமச்சர ஞகிய ழிந்தன
ஞலிப்பகை யாருமு டன்பவ
மாய்வர்த்தித மாய்வளர்கின்றன பிரியாமல்

யானெப்படி தாழ்வது நின்சரண்
நீயெப்படி யாள்வது நின்கிருபை
யேதெப்படி யோவறி கின்றிலெ னருள்வாயே

வாமக்கதிர் வானிம டங்கலும்
நீள்சிற்றின்ம காபகி ரண்டமும்
வாழப்புகும் வாசல்க ளிற்கிர னரன்வேதன்

பாவைகள் சுந்தரி
மாமுக்கணி வாணிவ ளைந்திடும்
வாசற்சிறு தோழிய ரென்றதில் விளையாடும்

சோமப்பிரபை யாமொரு பெண்பிளை
பாடித்தரு மாலையும் மென்குழல்
சூடித்தரு மாலையு மன்புறு கெடுமாலே

சூழ்செச்சைகள் கோபுர மண்டப
மாடத்திரு வீதிவ ளர்ந்திகழ்
சோதிப்புது வாபுரி வந்தருள் பெருமாளே. (சஅ)

சுவாமி - அரங்கமன்னர். தாயார் - கோதையார்.

பெரியாழ்வார் ஆண்டாள் மங்களாசாசனம்.

யுலையுமு னுண்டொரு மாதவ னாகிய
வலியம்ரு கண்டும காமுனி பாலக
னொருவனை யங்கவை காவெனை வேயருள் புரிவோனே

சுகமுனி தும்புரு நாரதர் வ்யாசர்கின்
னரரொடு கிம்புரு டாதியர் பாடிடு
சுகிர்தப ரம்பர பாதச ரோருக நெடுமாலே

சுரர்கள்வ ணங்கிய தேவபி ராமெனு
முதல்வநி னைந்தெனை யாளுடை யாய்வளர்
தொலைவிலி மங்கல மாநகர் மேவிய பெருமாளே. (கo)

சுவாமி-அரவிந்தலோசனர். தாயார்-கருந்தடங்கண்ணி நாச்சியார்.
நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

ஸ்ரீவரமங்கை. (கக)

(தோதாத்திரி வானமாமலை நாங்குனேரி)

தான தானன தந்தன தத்தன
தான தானன தந்தன தத்தன
தான தானன தந்தன தத்தன—தனதானா.

தீன மாகிய டர்ந்தசெ டிச்சமு
சார மாயெழு கின்றவ னத்திலோர்
தேக மாகியெ ழும்பிய புற்றிடை பொறிவாயிற்

றேடி யேபுகு மிந்த்ரிய சர்ப்பம
தேறி யாசையெ னுங்கடி வைத்தது
சீற வேவிட மண்டையி னுட்கொள வதனாலே

ஞான பாதக மென்றக சப்பது
போக மாகிவிளைந்தர சித்தது
ஆகின் மீளும ருந்தினி யெப்படி யறிவேனோ

வான தாய்தமர் பெண்டிரு மக்களு
நீய லாதொரு தப்பமி லேக்கடி
தாள்வ தேகட னென்றனை யிப்படி விடலாமோ

போன நீயெதிர் வந்தது கெட்டிய
தார டாவிதி லிங்குனை விட்டது
போர டாபொரி லின்னுபு றப்படு பயமாயே

போதி யேலது நன்றுபி ழைத்தனை
பேரவெ ளுவிரண் யன்சொலு ரைத்திடு
போதி லேயவ னெஞ்சகி ழித்தரு ளரியோனே

பான மாமட மங்கையர் பத்தர்கள்
சேனை மாமுதல் வன்பற வைக்கிறை
வால சூரியர் சந்திரர் நட்பொடு தொழமேவும்

வான மாமலை நண்பப ரப்பிரம
தேவ நாயக பங்கய லட்சுமி
வாச ஸ்ரீவர மங்கைந கர்ப்பொலி பெருமாளே. (௱க)

சுவாமி - தெய்வநாயகர். தாயார் - ஸ்ரீவரமங்கை நாச்சியார்.

நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருப்பேரை. (கஉ)

தனதன தந்தத் தானன தந்தன
தனதன தந்தத் தானன தந்தன
தனதன தந்தத் தானன தந்தன—தனதானா.

தனதுசு தந்த்ரத் தால்விக டந்தரு
மரசனை நம்பிப் போரின்ம டிந்தவர்
தலைவனை நம்பித் தீயில்வி ழுந்தவர் மகமேசெய்

தகரினை நம்பித் தானிடை யன்குல
மிவர்சுகிர் தம்பெற் றேகதி சென்றனர்
சகமுழு தும்ப்ரக் யாதிக ளிங்கிவை — யிதுவாறு

துனைமிக நம்பித் தாய்தயர் பெண்டிரு
மனைமக வுஞ்சத் தாதிம லங்களு
மொழியமி குஞ்சுக் ஞானசு கந்தனில் — மிகமூழ்கி

யுணர்வொடு நின்பொற் பாதம்வ ணங்கிநன்
மலர்கொடு வந்தித் தாடிய தொண்டர்க
ளுறுகதி யெந்தப் பேறுமொ ழிந்திட — வசமாமோ

முனிதினை டுஞ்சக் ராசல மண்டல
மயன்முத லந்தப் பூதம டங்கலு
மெளிதினி லுண்டிட் டாலினி ளந்தளி — ரணைமீதே

யெளியவி ளந்தைப் பாலனெ னும்படி
பிரளய வந்தத் தாவர ணந்தர
விருகண்வ ளர்ந்திட் டாதியு மந்தமு — நிறைவோனே

வனசம டந்தைப் ப்ராபக பங்கய
னரனிவர் சங்கற் பாதிப சம்பிரம
மறைபர வுஞ்சக் ராயுத சங்க்ரம — நெடுமாலே

மகரநெ டும்பொற் காதிடு குண்டல
வருணன்வ ணங்கித் தாடொழ வன்புறு
வளமிகு செஞ்சொற் பேரையில் வந்தருள்-பெருமானே. (ருஉ)

**சுவாமி-மகரநெடுங் குழைக்காதர். தாயார்-தாமரையாள்.**

நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## ஸ்ரீவைகுந்தம். (கரு)

தானனா தனனதன தந்தனந் தனனதன
தானனா தனனதன தந்தனந் தனனதன
தானனா தனனதன தந்தனந் தனனதன—தனதானா

வானுளோர் தழையவமிர் தங்கடைந் துதவிவரு
சோமகா சுரனைவிழ வென்றுபங் கயன்மறைகள்
வாழுமா றுசெய்துமிகு பங்கம்வந் துறுசமய மாறேடி
மாள்கிலா சருவிரியெதிர் சப்பரன் கனகனடல்
ராவணா சுரன்வதைபு ரிந்தெரிந் திரணசு
மாறிலா தருளியகி லண்டம்விண் டலமுழுது முயிர்யாவும்

ஏனையா வையுமுகமு டிந்தழிந் தொழியுமொரு
போதுதா யெனவருளசு ரந்துதந் துயிர்களொடு
மேகனா யவரவர்க ணின்றநின் றளவிலுற வருள்கூரு
மீசனாய் முழுவதுநி றைந்தவுன் றனையொரும
கோபகா ரகவிணைமதி னைந்துசிந் தனையிலறி [வாரோ
யாதமா னிடர்களறி வென்கொலென் பெறுவருனை யடை

ஆனவோர் பிரமமெவ னென்றுநின் றிரணியன்வி
னாவுமவ் வேளையிலவன்மு னந்தனஞ் சயன்முனமொ [ழி
ராமையா னதின்முன்விடை நம்பன்முன சகதலமொர்-குடை
லாளுமா வலிமுனயன் முன்றுரியன் முன்விசுவ
ரூபமே கொடுமுடிவி லங்குருடம் பிரமமது
வாவென னௌவெளியி னிறைவம் பரமபத - கெடுமோலே

ஆகரு விரிவளவ லங்கலந் தொடையமரு
கூனிகூ னதுநிமிர வன்புகந் தவள்பெறுக
கோதையா தரவுகள்புரிந் தாண் புடனருளி யதலாதே

சூதும்வா துகளுமுள வஞ்சநெஞ் சகமுடைய
கூனிகூ னதுநெளிய வுண்டையம் புதவுமொரு
சோரநா யகதிருவை குந்தையம் பதிமருவு-பெருமாளே. (௬௩)

சுவாமி - வைகுந்தநாதர். தாயார் - வைகுந்தமங்கை. நம்மாழ்வார்.

மங்களாசாசனம்.

---

## திருப்புளிங்குடி. (௬௪)

தனத்த தந்த தத்த தந்த
தனத்த தந்த த்த்த தந்த
தனத்த தந்த தத்த தந்த—தனதான.

ரசத்த மங்கள் சத்தி வங்க
ளெனப்பொ லிந்த முக்கு ணங்க
ளிவிற்ற மங்க ளைப்பொ ருந்தில் ம்ருகயோனி

யினிற்சன் மந்த ரிப்பர் நின்ற
ரசக்கு ணங்க ளாய்ப்பொ ருந்தி
லெடுப்பர் மன்ப தைச்சன் மங்கள் சுரயோனி

பிசைச்சன் மங்கள் சத்வ நண்பர்
செழிப்பர் தந்தெய் வக்கு ணங்கள்
விளைப்ப யன்க ளைத்தெ ரிந்திவ் வறியாதே

மிகுத்தி டும்ப ரத்வ மென்று
பிடித்து ளம்ப்ர மித்து வம்பில்
விடுப்ப ரிந்த நற்கு ணங்க ளறிவாரார்

குசத்த குங்கு மக்கு ழம்பொ
டளைத்த சந்த னக்கு ழம்பு
குழைத்த மஞ்ச ளிற்கு ழம்பை யிடைமாதர்

குழப்பி யொன்றெ னக்க லந்து
திரட்டி யின்பு றக்கொ ணர்ந்து
குளித்தி டுந்த டத்தி ருந்த — கலைதாமோர்

திசைக்கு ருந்தி டைக்க வர்ந்தவ்
வொளித்து மங்கை யர்க்கி சைந்து
சிரித்தி டுஞ்ச வுக்ய சிந்து — நயலீலா

செகத்தை முன்ப டைத்த லும்பின்
னளித்த லுந்து டைத்த லுஞ்செய்
திருப்பு ளிங்கு டிக்கி டந்த — பெருமாளே. (௫௪)

சுவாமி - காசினிவேந்தர். தாயார் - புளிங்குடிவல்லி.

நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவரகுணமங்கை. (௧௫)

தனதன தந்த தனதன தந்த
தனதன தந்த தனதன தந்த
தனதன தந்த தனதன தந்த—தனதான.

தாரும யங்கி யிளமைகு லைந்து
முதுகுவ ளைந்து நெளியவொர் தொங்கி
சரியமெ லிந்து நரைதிரை வந்து — தெருவூடே

தடிகைத ளர்ந்து தவறிவி ழுந்துள்
ளிருமலெ ழுந்த பொழுதும றிந்த
சலமல மெங்கும் வழியவ லைந்து — தமோமி

இருகண்ம ருண்டு கிழமைமி குந்து
பழமைமொ ழிந்து புலனுமொ டுங்கி
இயல்பும றந்த கிடையது கண்டு — பலபேரு

மினியென பண்ட மினியென பெண்டி
　　ரினியென மைந்த ரினியென பந்து
　　வெனவரு மந்த தசையினி லன்பு　　　　புரியாயே

விளையர விந்த மலரய ளங்கை
　　யதனிலு றைந்து னடியில்வி ழுந்து
　　விரிசடை நம்பன் முடியிலி றங்கி　　　　விளையாடி

மிகைபெரு கங்கை நிகர்புனி தங்கொள்
　　சவரிமு னுண்ட கனியைவி ரும்பி
　　விலையிலை யென்று பரமப தங்கை　　　　யருள்கோனே

மருவொழு கும்பொன் வனசம டந்தை
　　புவியின்ம டந்தை யிவர்கண்ம கிழ்ந்து
　　வருடிய வம்பொ னடிகள்வி ளங்க　　　　வொளிவீசும்

மகுடப டங்கொள் பலதலை பந்தி
　　கவியும னந்த சயனமி லங்க
　　வரகுண மங்கை நகரி லிருந்த　　　　பெருமாளே. (௫௫)

சுவாமி - விஜயாசனர். தாயார் - வரகுணமங்கை.

நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

திருக்குளந்தை. (௧௬)

தானத்தாத் தானன தனந்தன தனதன
தானத்தாத் தானன தனந்தன தனதன
தானத்தாத் தானன தனந்தன தனதன—தனதான.

மேலைப்பார்த் தால்வெடி கிடந்தகா றிடுமலர்
　　வரையைப்பார்த் தாலவ மணங்கள்வீ சிடுமுலை
　　மேருப்பார்த் தாலிரு கிலந்தியாய் விடுமிணை　　　　விழியான

வேலைப்பார்த் தால்வழி குழம்புபீ லிகள்வயி
ரூலைப்பார்த் தால்வெகு மலங்களே விழுமல்குல்
மீறிப்பார்த் தாலுவர் கசிந்துநீர் வருகுழி குழலான

மாலைப்பார்த் தாலதர் மிடைந்தனூ றிடுவிரு
தோளைப்பார்த் தானிறை நரம்புபோர் வைகண்மட
வாரைப்பார்த் தானடை பிணங்களா மிவைதமை-நினையாதே

மாலுக்கேற் றேபர வசங்களா யவரிடும்
வேலைக்காற் றூதுள மெலிந்தபா லியையவ
மாகப்போக் காதுனை வணங்கவே க்ருபையது புரிவாயே

சாலப்போர்க் கோலம தணிந்திரா வணனெதிர்
சீறிட்டார்த் தேபொரு துடைந்துநீண் முடிபடி
சாயத்தேர்ச் சாரதி யுருண்டுகீழ் விழநரி கழுதோடு

தாவிக்கூத் தாடவெ கவந்தமா னவைபிண
மீதுற்றூர்த் தாடிட வடங்கலா ரவர்படை
தாழப்போட் டோடிட வடர்ந்தரா கவனெய் கணைமாலே

வாலப்பூச் சூடுது மொழிந்துதோ டமதுவ
ராமற்காப் பீடது பகர்ந்துவீ றியதமிழ்
மாலைப்பாட் டாலிசை தெரிந்ததே சிகரொரு பெரியாழ்வார்

மாறிட்டேற் றேபர மதங்களா னவைகெட
வோதுக்கேற் றுய்முன மகிழ்ந்துபா டியபுகழ்
மாயக்கூத் தாவளர் குளந்தைமா நகர்வரு-பெருமாளே. (ருகூ)

சுவாமி - மாயக்கூத்தர். தாயார் - குழந்தைவல்லி நாச்சியார்.

நம்மாழ்வார் மங்களாசாசனம்.

## திருக்குறுங்குடி. (கஎ)

தனத்த தந்தன தானன தந்தன
தனத்த தந்தன தானன தந்தன
தனத்த தந்தன தானன தந்தன—தனதானா.

அடிக்கி னும்பிளை தாயைநி னைந்தழும்
வெறுக்கி னுங்குடி ராசர்கள் பின்செனு
மழற்பி றங்கினு மாமலர் செங்கதி — ரிணைநாடு

மறுக்கி னும்பரி காரியை நம்புவர்
வறக்கி னும்பயிர் வானைநி னைந்தெழு
மழிக்கி னுங்குல மாமக டன்கண — வனையூடாள்

எடுத்த விங்கிவை போலநி னைந்தடி
யெனைப் புரந்தரு ளாதுமு னிந்துற
விடர்க்கொ டுந்துய ரேசெயி னும்புக — லிடமாக

வெனக்கு நின்சர ணேகதி யன்றியொர்
புறத்தொர் தஞ்சமி லேன்முழு துந்தனி
யிரட்சை கொண்டருள் கூருவ துன்கட — னருள்வாயே

குடத்து வெண்டயிர் தாழியொ டுண்டுபொ
யுறக்க மந்தற வாயரி ளங்கொடி
குறிப்ப றிந்திவ ரேயல திங்கினி — வருவாரார்

குடித்த தும்பிழை பாரமு மன்றிவர்
வயிற்றெ டுங்குமிவ் வேழுல கென்றரு
குறப்ப யந்தவர் போலவு தைந்தழு — கெடுமாலே

திடப்ப டுஞ்சட கோபரு ருந்தமிழ்
தெரித்த சண்பக மாறர்பெ ரும்புகழ்
செழித்த தென்குரு கூரர்வ ணங்கிடு — பெருமானே

திரைத்த டங்கரை வாளையெ ழுந்தயல்
குதித்தி ளங்கமு காடவி சென்றுகள்
திருக்கு றுங்குடி மாநகர் நின்றருள்　　　　பெருமாளே. (௩எ)

சுவாமி - வைணவநம்பி. தாயார் - குறுங்குடிவல்லி.

நம்மாழ்வார் பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

திருக்கோளூர். (கஅ)

(திருக்களூர் திருப்புகுழூர்.)

தனன தந்தன தான தந்தன
தத்த தானன தத்த தானன
தனன தந்தன தான தந்தன
தத்த தானன தத்த தானன
தனன தந்தன தான தந்தன
தத்த தானன தத்த தானன—தனதானு.

துருவ னன்பொடு ஞான சிந்தனை
பெற்று நீள்பத மத்தி ஞறொரு
வினகு லன்கர்ம மேபு ரிந்திரு
டிப்ர பாயின னித்ய மாயடி
தொழுதெ ழும்ப்ரக லாத னன்றன
பத்தி யாலொரு பட்ட மேவின　　　　னவையோர்முன்
த்ருபதை யன்றவ மானம் வந்துப்ர
பத்தி யாலுடை பெற்று வீறின
ளிவர்க ளொன்றுனை யேவ ணங்கியொர்
துச்ச மானப லத்தி லாயினர்
சொலில ருந்தர்ம நாலி னுங்கதி
பெற்ற பேரிலை யுற்ற தாமினி　　　　யிவலாதோர்.

தரும முண்டது கூறின் மெண்குழ
விக்கு நோய்வரி லுற்ற தாயவு
டதம ருந்திடு மாறெ னும்படி
ரட்சை கூர்தரு மிக்க பாகவ
தர்களெ னும்பெரி யோரு னன்பர்கள்
பக்க லாதர வுற்று நாடொறு மகிழ்வாயே

தனக யிங்கர்ய பார தந்த்ரிய
நிட்டை யேகிர்த க்ர்த்ய மாய்விடி
விகப ரந்தன வாய டைந்திடு
மித்தை யாவர்க்ரு ஒப்பர் யாரொரு
தமிய னிங்கிவை யான வைந்ததர்
மத்தி லேயும சத்த னுமெனை யருள்வாயே

அரம டந்தைய ராயர் மங்கையர்
மெச்சி மாமய லிச்சை யேகொள
மலைமு ழுஞ்சத னூட டைந்துறை
நச்ச ராவது கிட்டி யாடிட
வசல நின்றுரு காம ரம்புடை
பட்ட கோடுத ளிர்த்து மேலெழ மிகவான

அசர முஞ்சர மான வுங்கைய
சைத்து வாழ்வுத ழைக்க வேவளர்
கினரர் கிம்புரு டேசர் தும்புரு
மிக்க நாரதர் வெட்கி யேதொழ
வமுத மென்கனி வாய்தி றந்திர
சித்த மாமது ரப்ர வாகம இனிதோட

மருவெ ழுஞ்சிகை மாலை தொங்கிட
நெற்றி மீதணி சுட்டி யாடவொர்
கழலு டன்கழன் மாறி நின்றுகை
பொத்தி மீளவி டுத்து மோகன

மதுர மென்குழ லூதி நின்றிசை
பெற்ற ராகம்வி ளைத்த கோவலர் பெருமானே
வனச மங்கைம ணாள சம்ப்ரம
விட்சு வாகுல பட்சி வாகன
மகுட பந்திகொ ளாயி ரந்தலை
கெட்ட ராவணை மீத்ய மேதுயில்
வளமி கும்புகு மூர்வி ளங்கிய
வைத்த மாநிதி மிக்க தேவர்கள் பெருமாளே. (௩௮)

சுவாமி - ஸ்ரீகரர். தாயார் - பூரிஜாதவல்லி.

நம்மாழ்வார் மங்களாசாசனம்.

பாண்டிநாடு முற்றிற்று.

---

## மலைநாட்டுத் திருப்பதிகள்.(௧௩)

### திருவனந்தபுரம். (௧)

தனன தந்தன தத்த தானன
தனன தந்தன தத்த தானன
தனன தந்தன தத்த தானன—தனதான.

கதமி குந்தம னத்த ருயிரு
வினைகி டந்துவ ருத்த வேதுயர்
கழிகு மென்கொடு மைக்கு மேயுன தரிதான
கருணை யன்றியி லக்கு வேறிலை
யுனத ருங்கரு ணைக்கு மோவென
கபட மன்றியி லக்கு வேறிலை யதனாலே
இதுவொ ழிந்திடி விட்ட மேதரு
முனத ருங்கரு ணைக்கு மோர்பய
னிலையென் வெங்கொடு மைக்கு மோர்பய னிலையாரு.

மௌளியெ னன்றிய ளிட்ட ரோவிலை
யுனையு மன்றியி ரட்சை யோவிலை
யிருவ ருஞ்சரி ரட்சை கூர்வது கடனாமே

மதமி குந்தவ லிட்ட ராவணன்
மதலை யென்றுப்ர சித்த னாய்மிக
வளரு மிந்திர சித்து வாமொரு நிருதேசன்

மதிளி லங்கைந கர்க்குள் வேள்விசெய்
திடுநி கும்பலை சுற்றி யேயெதிர்
வனச ரங்கள்வ ளைத்து லாவிட வடல்வேள்வி

சிதைவு கண்டொரு லக்ஷ்ம ணாதிப
னவனெ டுந்தலை பற்றி யேகொடு
திறையி டுஞ்சர ணப்ர பாகர நெடுமாலே

திரும டந்தைகொள் பற்ப நாபநல்
முடிய னந்தப டத்து ளேதுயில்
திருவ னந்தபு ரத்து மேவிய பெருமாளே. (ருகூ)

சுவாமி - அனந்த பத்பநாபர். தாயார் - ஸ்ரீஹரிலக்ஷ்மி.

நம்மாழ்வார் பெரியாழ்வார் மங்களாசாசனம்

---

## திருவண்பரிசாரம். (உ)

தனதன தந்தன தான தானன
தனதன தந்தன தான தானன
தனதன தந்தன தான தானன—தனதானு.

வரகுண மங்கைபு லாணி பேர்நகர்
புதுவைபு ளிங்குடி சோலை மாமலை
மதுரைகு ருங்குடி வான மாமலை திருமோகூர்

வதரிக ணங்குடி பேரை மாநகர்
தொலைவிலி மங்கல மாத னூர்வட
மதுரைகு டந்தைவெஃகாவிண் மாநகர் புகுழூர்நீள்

திருவெளி யங்குடி கூட லூர்வளர்
கடிநக ரந்திரு நாகை நீர்மலை
திருமலை தென்குரு கூர்து வாரகை திருவாலி

திகழும ரங்கவி மான மூரகம்
அதிகத லங்களெ லாமெ ழுலதி
செயசெய வென்றொரு வாழி கூறிட வருள்வாயே

கருணைபு ரிந்திரு பாக ராவொரு
தசரத நந்தன ராக வாபெறு
கவுசலை சம்ப்ரம மோக னவெமை யுடையோனே

கரியமு குந்தம னேக ராமுகை
அவிழர விந்தவி லோச னவர
கரதல செந்திரு வாழு மார்புள நெடுமாலே

பெருகிய சங்கணி யாறர் வீறுடை
முனிவரர் சண்முக மாறர் வீடருள்
பிரமமெ னுஞ்சட கோப னூர்தமை மகவாயே

ப்ரியமொடு தந்தருள் காரி யார்மனை
யென்வுயர் நங்கைப்ர தாப வாழ்வது
பெறுதிரு வண்பரி சார மேவிய பெருமானே. (௯௰)

சுவாமி - திருவாழ்மார்பர். தாயார் - கமலவல்லிநாச்சியார்

நம்மாழ்வார் மங்களாசாசனம்.

## திருக்காட்கரை. (௫)

தனதாத்தன தானன தானன
தனதாத்தன தானன தானன
தனதாத்தன தானன தானன——தனதான.

மனத்தாற்கரு தாதது நீள்விழி
யிடத்தாற்றெரி யாதது வாயுவின்
வசத்தாற்றிவ ளாதது சூரிய வடிவாளின்
வலத்தாற்றுணி யாதது வார்புனல்
நனைத்தாற்குளி ராதது தீயெரி
மடுத்தாற்றகி யாதது வீழ்பொறி புலனமாயை
இனத்தாற்சலி யாதது நீடிய
பிறப்பாற்பெரு காதது நாடொறு
மிறப்பாற்சிறு காதது பேரறி வுடைஞான
மிதற்காக்குவை யோமட மாதர்கள்
தமக்காக்குவை யோவத லாலினி
யெவர்க்காக்குவை யோவறி யேனெனை யருள்வாயே
தனக்கேற்றகல் யாதரு ணேவனு
பவப்பூர்த்தியி னூன தாகிய
சிக்கித்தையை யாவுப காரக னெனமீது
தமிழ்ப்பாட்டொளி யாயிர மாமறை
வியப்பாற்பெரு வாய்மொழி யோதிய
சயப்பார்க்கட னாடொறு மேவல மருவோனே
சினத்தாற்பொரு சூரனை வாதைசெய்
புடைப்பாற்ககனாடர்கள் சேசர்கள்
இருப்பாற்கடன் மீதுனை யேதொழ விளிதாவே

சிரித்தாக்கைசெய் வோமசு ரேசனை
புமைக்காத்தருள் வோமென வேமொழி
திருக்காட்கரை மாநகர் மேவிய பெருமாளே. (௬௧)

சுவாமி - அப்பன். தாயார் - பெருஞ்செல்வநாயகி.

நம்மாழ்வார் மங்களாசாசனம்.

## திருமூழிக்களம். (௪)

தானத் தனத்தன தனதன
தானத் தனத்தன தனதன
தானத் தனத்தன தனதன — தனதானா.

பாரட் சகத்துவ முடையார்சர்வ
சேடித் துவப்பர ரெவரார்கொல்கல்
யாணக் குணக்கட லுடையோரென நினையோதி

மேலெட் டெழுத்தினி னமசேயொரு
நாலெட் டெழுத்திலு னருளேபதி
னேழெட் டெழுத்தது சரணாகதி தெளிவாய

காரப் பதத்தினி லனன்யாகதியு
காரப் பதத்தினி லுறுசேடம
காரப் பதத்தினின் மிருகாசிய முடையோனே

காணிற் றனிற்பிர ணவமாயெழு
மோரட் சரப்பொருள் வெளியாமெவர்
காணிப் பதப்பொரு ளறிவாரிதை யருள்வாயே

பாருக் குமெட்டரி தெனவேயொரு
மூலப் பரப்பரம முதலாய்வினை
யாமெ பவத்திதி லயகாரண மயமானோ

ராதித் தனிச்சுட ரெனுநீமத
யானைக் குரட்சக னெனவேவெளி
யாமப் படிக்கடி யவர்மேலரு ளுடையோனே

மூரிப் பகட்டிள வரிவாளைகள்
வாழைப் பழக்குலை விழுதாறிடை
மோதிக் குடக்கனி சுளைகீறிட நறைபோயடி.

மூடிக் கதிர்க்குலை தலைசாடிடு
சாலிப் பணைக்கழ னிகள்சூழ்திரு
மூழிக் களத்துறை தருதேவர்கள் பெருமாளே. (சுஉ)

சுவாமி-திருமூழிக்களத்தார். தாயார் - மதுவேணிநாச்சியார்.

நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருப்புலியூர். (ரு)

தனத்தன தானன தனன தந்தன
தனத்தன தானன தனன தந்தன
தனத்தன தானன தனன தந்தன—தனதானா.

உருத்திர ரோபதி னொருவ ரெஞ்சலில்
வரப்ரம ரோபதின் மர்கள்பி னும்பினும்
வுரைத்திடு தேவர்க ளளவி றந்தவ ரிதலாதே

யுலப்பில்வி பூதியு மளவி றந்தது
பரப்ப்ரம மாரிதி லெனவு ணர்ந்திடி
லொருத்தரு மோவிலை யிவர டங்கவு முனதானை

அருட்கொடு வாழ்பவ ரெனினி ரம்பிய
பரத்துவ நீதிட னுனையு மன்றியொ
ரறப்பெரி தாகிய பொருளு முண்டது பரதாழ்வார்

பருச்சனை யாவது கொடுதிரும்பிய
திரட்சக மாயது செகநிறைந்தன்
தனைச்சொலி லோதிரு வடிக ளங்கனை — யருள்வாயே

பெருத்தப யோததி மிசையி னுந்தியின்
முளைத்தொரு தாமரை மலர வங்கது
ப்ரமச்சுத னேபெற வனி லங்கிய — நுதன்மீதே

பிணைத்தச டாமுடி யவனை யும்பெற
விரித்தப ணுடவி யணையில் விஞ்சிய
ப்ரியத்துட னேயறி துயில மர்ந்தருள் — திருமாலே

செருக்கள மீதடல் புரியும் வஞ்சக
னெடுத்தெறி வேலது தொடர நெடு
திகைத்துவி பீடணன் மனம ருண்டற — விழுபோதே

சிரித்துட னேயினி யபய மஞ்சன
மடைக்கல மாமென வதன்முன் வந்தவ
திருப்புலி யூர்நகர் தழைய நின்றருள் — பெருமாளே. (கூ)

சுவாமி - மாயப்பிரான். தாயார் - பொற்கொடியாள்.

நம்மாழ்வார் மங்களாசாசனம்.

## திருச்செங்குன்றூர். (கூ)

தனத்தந்தந் தாத்தத் தான தானன
தனத்தந்தந் தாத்தத் தான தானன
தனத்தந்தந் தாத்தத் தான தானன—தனதான.

முகப்பொங்கம் பூட்டிப் போது வாரெதிர்
மருட்டுங்கண் கோட்டிப் பேசு வாரிரு
முலைக்கும்பங் காட்டிக் கூசு வார்பதி — மனவாடை

முழுக்கந்தங் கூட்டிப் பூசு வாரொரு
வரைக்கண்டங் கார்த்துக் கூவு வாரவர்
முடிக்குஞ்சங் காத்தப் பாச மாயுண ரறிவேபோய்

ஏயங்கண டாறபற றுசை யாகவு
மொழுக்கங்கண் டாற்கிட் டாது போகவு
மங்கிடங்கொண் டேற்கப் பாலு ளாங்கிய துணைகாணு

சதற்கெங்கும் போக்கற் றேடி யேயுன
தருட்டஞ்சம் பார்த்திட் டேகி னேனென
தவப்பங்கந் தீர்த்திட் டாள்வ தேசுட னருள்வாயே

மிகத்தண்டும் போர்க்குட் போர்செய் ராவணர்
சயத்தம்பம் போருமந் டோட நாய்நரி
மிகுத்தெங்குங் கூப்பிட் டோட வேசம ரிடுவோர்மேல்

விளைத்தம்பொன் றேற்றிச் சீறி வீடணர்
தமக்கன்றன் பாய்ப்பட் டாபி ஷேகமுன்
விதிக்குந்திண் டோட்சத் திரீய ராகவ நெடுமாலே

சகத்தண்டம் போற்றற்ச் சாவ தாரகை
துளக்குஞ்சங் காற்சக் ராயு தாசெய
செலத்தந்தரங் காட்டக் க்ரூர நாயக சடகோபர்

தெளித்தந்தம பார்த்தப் பாக மாமறை
தமிழ்ச்சந்தஞ் சேர்த்துப் பாடு மாதவ
திருச்செங்குன் றூர்ச்சிற ந்ருய னேசுரர் பெருமாளே. (கூசு)

சுவாமி - மையாரடலை. தாயார் - செங்கயலை நாச்சியார்.

நம்மாழ்வார் மங்களாசாசனம்.

## திருநாவாய். (எ)

தனதன தானா தந்தன தந்தன
தனதன தானா தந்தன தந்தன
தனதன தானா தந்தன தந்தன — தனதானா.

சடமறி யீரோ வென்புதி ரந்தசை
குணமறி யீரோ வைம்புல வஞ்சனை
தனையறி யீரோ வங்கணம் வென்றது துணையான

தவமறி யீரோ நின்றபெ ருஞ்செல்வ
மவமறி யீரோ நொந்துழ லுந்துயர்
சகமறி யீரோ வெங்கலி மிஞ்சின நரகாகும்

இடமறி யீரோ துன்பமி குந்தது
பரமறி யீரோ வின்பம்வி ளைந்திடு
மிகமறி யீரோ கொஞ்சம ழிந்திடு மிவையாள்வோ

னெவனறி யீரோ வென்றுனை ரும்புகழ்
மொழியினு மோர்நா யுண்டடெ யின்படி
யெதிரிடு மானு லுன்செயல் வஞ்சக மறிவாரோ

கடகரி நாதா கங்கைப யந்தருள்
சததள பாதா கண்டக னன்பெறு
கருணைவி நோதா நந்தன நந்தன நயசீலா

கவுதலை பாலா கண்டித பண்டித
தசரத ராமா வும்பர்கள் கும்பிடு
கரிகிரி வாசா கும்பநி கும்பர்கள் குலகாலா

சடமெரி கோபா நந்தரு டன்பொலி
பதினமர்க டேவா தண்டுளப ந்தரி
திருவணி மார்பா குண்டல மண்டித ரவிதேசா.

செழுசிலை வாளார் பங்கய செங்கைய
திருமலை யாளா வண்டலை தண்டலை
திகழ்திரு நாவா யம்பதி நின்றருள் பெருமாளே. (கூ௫)

ஸ்வாமி - பிரசன்ன நாராயணர். தாயார் - மலர்மங்கை நாச்சியார்.

பொய்கையாழ்வார் நம்மாழ்வார் திருமங்கையாழ்வார்

மங்களாசாசனம்.

---

## திருவல்லவாழ். (அ)

தனதைய தானத்த தானத்த தானதன
தனதைய தானத்த தானத்த தானதன
தனதைய தானத்த தானத்த தானதன—தனதானா.

ஆரனல்ல னேநித்யன் சேவித்து வாழுநம
னவனல்ல னேபத்த ருய்முக்ய தாஸ்யமுள
னதுசெய்ய வேமெச்சி யேமிச்சி லூணருளி யினிதாயே

மயனுள்ள லோகத்தை யேபட்ட மாள்கவென
யருள்செய்து நாள்வைத்த தேசத்ய மாகுமெனி
லயனெவ்வு லோகத்தி லேபட்ட மாள்வனினி யிதலாதே

ஒருவெள்ளி மால்வெற்பி லார்பட்ட மாள்வதுன
திருவுள்ள மாயத்தை யாவர்க்கு மேதெரிய
வுளவில்லை யாதிப்ர மாருத்தி ராதியரு மறியாரா

ஒருபொய்ய னேனிப்ர பாவச்சொ ரூபமதி
னளவெல்லை சோதிப்ப னோவெட்டு மோவுனிது
வுரைசொல்லி வாழ்விப்பை யோசித்த மேதடிமை-படுதாமோ

பரதொல்லை மேவிட்ட போருக்குள் ராவணன்மு
னெதிர்வில்லெ டாதத்ர மேவிட்ட போதிலிரு
பதுகைய டாமற்பொ ராசிற்க வேமறுகு திருதேசா

படவல்லை யோவெய்த்து நோவுற்றை யோபொரவும்
வசமல்ல வோவிட்டு நாளைக்கு வாவெனுமொர்
பகைவல்ல வாரட்ச காபட்சி நாதசெய ராமா

திருமெய்ய னேயத்த னேபத்தர் தேடரிய
கடன்மல்லை வாழ்கத்த னேநித்த னேவளமை
திகழ்கள்வ னூருத்த மாமுத்தர் பாடுமிரு மறையோனே

செறிகுல்லை வாசத்த னேபத்ம மாதுபுணர்
தருசெய்ய மார்பத்த னேகித்ய சூர்யர்தொழு
திருவல்ல வாழப்ப னேயொப்பி லாவுமரர் - பெருமானே. (௬௯)

சுவாமி - கோலப்பிரான், நாயார் - செல்வத்திருக்கொழுந்துவல்லி.

நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருவண்வண்டூர். (௭0)

தனன தந்தா தனதன தந்தன
தனன தந்தா தனதன தந்தன
தனன தந்தா தனதன தந்தன—தனதானை.

தரும மென்கோ முகைவிரி முண்டக
முதல்வ னென்கோ குறைமதி தங்கிய
சடைய னென்கோ புனலனல் விண்பவி வளியான

தமிய னென்கோ வமரர்கள் கும்பிடு
மிறைவ னென்கோ வாதிரு மந்திர
சரத னென்கோ வகிலசெ கங்களு நிறைவான

வரத னென்கோ விடைமட மங்கைய
ரெளிய னென்கோ வயனர னுந்தொழும்
வலிய னென்கோ வுனைமொழி யுந்திற னறியேனே.

வழுறு கர்ந்தா தரவொடு கன்றுக
ளிபல்ப றிந்தா வதுதொட ரும்படி
வலிய வந்தே யடிமைகொ ளும்பரி சருள்வாயே

இருவ ரென்றே யிளவலு டன்பொலி
கவுசி கன்பா லினிதுந டந்துமுன்
னெதிரி டுந்தா டகையையு ளிந்தபின் மகவாய்நே

ரிகலி டுஞ்ஸ்வா குலவையுமு னிந்தவன்
மகமு டங்கா வகையது சண்டக
விகைகெ டுஞ்சா பமுமொழி யும்படி க்ருபையாயே

தெருவ ளஞ்சூழ் மிதிலையில் சென்றொரு
சனகன் முன்பாய் முதியத்ரி யம்பக
சிலைமு றிந்தே விழவலி கண்டபின் மகிழ்வோடே

திரும ணஞ்சா னகியை விரைந்தருள்
சருவ சந்தோ டகரச வுந்தர்ய
திருவண் வண்டூர் தழைய விளங்கிய பெருமாளே. (சுஎ)

சுவாமி - பாம்பணையப்பன். தாயார் - கமலவல்லிநாச்சியார்

நம்மாழ்வார் மங்களாசாசனம்

---

## திருவாட்டாறு. (கo)

தனதன தாத்தாத் தான தானதத்
தனதன தாத்தாத் தான தானதத்
தனதன தாத்தாத் தான தானதத்—தனதானு.

செவிக்லை பார்த்தாற் பாவ கேள்விகட்
கிடையது பார்த்தாற் றேட பார்வைசொற்
றிறனது பார்த்தாற் கோப மாமுடற் பொறையாலே

செயல்து பார்த்தாற் ற்வேஷ மேகரத்
துணையது பார்த்தாற் சேவி யாதளத்
தினைவெளி பார்த்தாற் சூதும் வாதுமிப் புலனுலே

பவவினை பார்த்தாற் கோடி யாகிலோத்
தெனவகை பார்த்தாற் ற்ரோகி யாவெனிற்
பரிவொடு பார்த்தாற் றோட போகரட் சகனுபே

படுதுயர் பார்த்தாற் பார மோமனக்
க்ருபையது கூர்த்தாற் சேத மோசொலப்
படியும்வி னுப்பார்த் தாள்வ தேயுணக் இயல்பாமே

கவனமொ டீற்றுப் பாடி யார்சிறுக்
குடிலிடை போய்ப்போய்த் தேடி யேமநற்
கனலிடை காய்சசாப் பால்க டாமுருட் டிடவோர்தாய்

கயிறடி யாற்றேற் றேடு வாய்தனிக்
குடநட மாக்கூத் தாடு வோய்பசுக்
கனமழை காப்பாற் றுதி யாமலைக் குடையோனே

தவநெறி யாத்மாக் க்யான மோனநட்
பொடுகுரு கூர்க்கேத் தோர்பு ராதனத்
தமிழ்மறை பாட்டாற் பாடு வோர்வழுத் திடுமாலே

தருபூர சாட்சாத் கார மாதவச்
சய்த்ர சாத்ராப் யாச வாசவித்
தகதிரு வாட்டாற் றுதி கேசவப் பெருமானே. (சுஅ)

சுவாமி - ஆதிகேசவப் பெருமாள். தாயார் - மரகதவல்லிநாச்சியார்.

நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவிற்றுவக்கோடு. (கக)

தத்த தத்தாத் தத்த தானன
தத்த தத்தாத் தத்த தானன
தத்த தத்தாத் தத்த தானன—தனதானு.

துட்ட ருக்காட் பட்ட பேரவர்
சிட்ட ருக்காட் பட்ட பேரவர்
சொற்று றத்தாற் பெற்ற பேறவை — நரகான

துக்க மப்பாற் சொர்க்க மாமினி
வத்து வுக்காட் பட்ட பேர்தெய்வ
துர்ச்ச னர்க்காட் பட்ட பேர்பலன் — முநியோர்கள்

இட்டி டப்பார்த் திட்ட நீள்பொருள்
சொற்ப னத்தாற் பெற்ற தோர்பொரு
ளிப்ப டிக்காக் கட்ட மாமெனில் — முதலான

ரட்ச கப்ரார்த் தத்த ராரெனில்
நிற்ப ரத்வாத் தத்வ மாகவெ
டுத்து நிற்கீர்த் யத்தை யேசொல — வறிவாரார்

கட்டு முட்டாப் பட்ட மால்கரி
யெட்டு மொத்தேற் றிட்ட காலையில்
கட்ட றப்போக் கிட்ட ராவண — னமளூடே

கற்ப டுத்தேற் பட்ட நீண்முடி
பத்து கொந்தாத் தத்த வேயொரு
கைச்ச ரத்தாற் செற்ற ராகவ — னெடுமாலே

விட்டி டைத்தாய்க் கிட்ட மாவவள்
கட்டி டத்தாக் கிட்டி டாததை
யெய்ப்ப ணப்போக் யத்தொ டேகொளு — மூரவோனே

வித்த கச்சாத் ரத்த னேமறை
முத்த மிழ்ப்பாட் டத்த னேதிரு
வக்கோட் டப்ப னேசுரர் பெருமாளே. (சுக)

சுவாமி - அம்பரீஷ வரதர், தாயார் - வித்துவக்கோட்டுவல்லி.

குலசேகராழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்கடித்தானம். (கஉ)

தநத தத்தா தத்தன தந்தன
தத்த தந்தா தநதன தந்தன
தத்த தநதா தநதன தந்தன—தனதானா.

எற்ப கற்கா லத்திலி தம்பெறில்
வைத்தி ருட்கா லதநினி லுண்பர்வெ
யிற்றி னக்கா லத்தின லம்பெறில் மழைகால

மிச்சை யிற்போ கிப்பர்கி லேந்திள
மைச்சி றுக்கா லத்தில்ப ணம்பெறி
லெய்ப்பு டைக்கா லத்தில ருந்துவ ரிதுமாறில்

அற்ப முற்றே கெட்டுவ ருந்துவ
ரிப்ப வக்கா லத்துலே நம்பிடி
லப்ப வத்தா திக்கமி குந்திடு முனைராமே

லக்ஷ்மீ த்தே முட்டவ ழுந்துவ
ரிப்ப டிக்கே யுற்றவொர் பஞ்சவ
னர்த்தி பெற்றே முத்தி புகுந்தன னறிவாரார்

பத்ம நற்பீ டத்தினர் தென்குரு
கைப்ப திச்சே டப்புளி கொண்டவர்
பத்தர் கத்து ரித்தில கந்தரி மகிழ்மாறர்.

பட்சம் வைத்தா லிப்பொரு ளின்றொகை
முத்த மிழ்ப்பா டற்கவி கண்டுபிர
பத்தி வித்தா ரத்தினு டன்றொழு தெமாலே

சிற்ப ரக்யா னப்ரியம் விஞ்சிய
சுத்த சத்வா நித்தியர் தும்புரு
சித்தர் வித்யா தித்தர்வ ணங்கிடு திருமாலே

சிட்டர் விட்ணு சித்தர்ப யந்தவொ
ருத்தி பொற்கோ தைத்தொடை கொண்டதி
ருக்க டித்தா னத்தினி னின்றருள் பெருமாளே. (எ0)

சுவாமி - அற்புதநாராயணர். தாயார் - கற்பகவல்லித்தாயார்.

நம்மாழ்வார் மங்களாசாஸனம்.

---

## திருவாறன்விளை. (கஈ)

தனதானன தத்ததத்தன தத்த தானன
தனதானன தத்ததத்தன தத்த தானன
தனதானன தத்ததத்தன தத்த தானன—தனதானு.

பிரமாவையு தற்படைத்துவி டுத்த தாருக
முடிநாளில்வ யிற்றில்வைத்துவ ளர்த்த தாரொரு
பிறைவேணிய னைப்ப்ரதிட்டைய ளித்த தாரிவை தெரியாதே

பிறதேவதை யைத்துதித்துநி னைத்து ளோர்முன
முபகாரம திற்படைத்தது ரைப்ப ரோவிவர்
பெருமாயைதொ டுத்தலைத்தும யக்க வேயுணர் வழிவோரே

தரமாகிய புத்ரமித்ரக ளத்தி ராதிகள்
முதலோரைவி டுத்தடைக்கல முற்ற வீடணர்
தமையாள்வத மைச்சருக்கும ளித்த வாறெண வினிதாயே

தமதாகிய வீட்டைபெற்றக ருத்து ளோரடி
யடியாரடி யர்க்குமற்றுள சுற்ற மாகிய
தமரேழுபி றப்புமுக்யப லத்தை மேவுவ  ரறிவாரார்
அருளாகுமெ னப்பிடித்தொரு வத்து வாமென
நவகோடிசி வப்ரதிட்டைசெ லுத்து ராவண
னணிகோபுர மத்தியத்தினி னிற்க வேயவன்  முகமீதே
வடலோடுகு தித்தரப்பிய டித்து மீறிய
மணிமாமுடி யைப்பறித்தொரு சுக்கிரீவனுன்
னடிமீதிறை யிட்டுகட்பின்வ ழுத்த வேயருள்  புரிவோனே
திருஞானம றைப்பொருட்டெளி வுற்று நாடிய
தமிழாகவ டித்தெடுத்துரை யிட்டு வாதிடு
ஐபவாதிய ரைத்தரத்திவெ ருட்டு நாயகர்  தொழுவோனே
சிறைகோலிய னப்பெடைக்குல முட்டை யாமென
வரிவால்வளை முத்தெடுத்தடை வைத்து லாவிடு
திருவாறன்வி ளைத்திருக்குற ளப்ப னேசுரர்-பெருமாளே. (எக)

சுவாமி - திவாமனர். தாயார் - பத்மாசன நாச்சியார்.

நம்மாழ்வார் மங்களாசாசனம்.

மலைநாடு முற்றிற்று.

---

## நடுநாட்டுத் திருப்பதிகள். (உ)

### திருவயிந்திரபுரம். (க)

தனன தந்ததன தனன தந்ததன
தனன தந்ததன தனன தந்ததன
தனன தந்ததன தனன தந்ததன—தனதானு.

ஒருவர் தஞ்சமிலை யெனது தஞ்சமிலை
யுனது தஞ்சமெனு மளவி றந்தவுயி
ருளதி லொன்றெனுமி வுயிரை யன்பினொடு  பிறர்கூடி

யொருவர் தந்தையென வொருவர் மைந்தரென
வொருவர் பெண்டிரென வொருவர் தம்பியென
வொருவர் பந்துவென வொருவர் தம்பமென முறைகூறி

மருவு கின்றவிவ ருறவு முன்புமிலை
யிடையில் வந்தவுற விதுத னம்பிரியில்
வலிய நிந்தைசொலி யுடன கன்றுவிடு மிவராலே

வரிசை பெண்கொல்பெரு சுகிர்த மெண்கொலுரு
தரும மெண்கொல்வரு மவம தன்றியிலை
வலிய வந்தினியு னடிமை கொண்டருள நினைவாயே

எருத டர்ந்துபரு மருகி டந்துதொடர்
சகடு தைந்துபொரு பகடெ றிந்துதனி
யிளைய கன்றுகொடு விளவெ றிந்துமிக விளையாடி

யிடைம டந்தையர்கள் விலையி டுந்தயிரை
வழியி னின்றுகல்கொ டெறிய முந்திபிடி
யிடவு டைந்துகுட முருள நின்றுநகை புரிவோனே

திரும டந்தையிரு குவடி வென்றமுலை
முகடு முழுங்களப சுவடு தங்கியதி
செயமி லங்கநட மிடுசெ வுத்தரிய மணிமார்பா

சிறை கறங்களிகள் விளரி பண்கெழுமு
துழனி பொங்கியெழு கழனி மிஞ்சிவளர்
திருவ யிந்த்ரபுர மிகவி ளங்கவரு பெருமாளே. (எஉ)

சுவாமி - தெய்வநாயகர். தாயார் - வைகுந்தநாயகி.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருக்கோவலூர். (உ)

தானதான தானதான தானதான தானதான
தானதான தானதான —தனதானா.

சீதராம ராமராம ராமராவெ ணுவன்மீகி
தேறுராம ராமராம — ரகுராமா

தேவமானு டாதிபேத சேதனோடு சேதனாது
சேவதார காபிமான — நெறிநேறி

மாநுபாக ஞானகாசி வாழுநாத னோதும்வேத
மானசீதை ராமராம — வபிராமா

வாழிவாழி நீயெனுவ் னுசையாகி மோகமாகி
வாசிகூறு மேகநீதி — யருள்வாயே

ஆதியாய னுதியாகி வேதமாகி வேள்வியாகி
யாமையாகி யாயனான — நெடுமாலே

யானையாதி மூலமேயெ னுமுனோடி யேகராவி
னுவிமாள வேகவாழி — விடுவோனே

கோதிலாவ னேகநீத சீதபாத நாதகீத
கோவிநாத போதபூத — மயமானுய்

கோலநீல மேனியாயு பாயமாய நேயதூய
கோவலூரில் வாழ்வுமேவு — பெருமாளே. (எக)

சுவாமி—தீர்த்தகிரீசன், ஆயனார், திரிவிக்கிரமர். தாயார்—பூங்கோயிலாள்.

பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார்.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

நடுநாடு முற்றிற்று.

# தொண்டைநாட்டுத் திருப்பதிகள். (௨௪)

## திருக்கச்சிஅத்தியூர். (௧)

தத்தத்தன தத்த தானன
தத்தத்தன தத்த தானன
தத்தத்தன தத்த தானன—தனதான

நட்டத்தவ முற்று மாதர்கள்
பற்றித்தரு முத்தி யேபெற
நட்புற்றவர் சொர்க்க மாமலை " மிசையேறி
நச்சிச்சைவ முத்தி யேதர
கட்கெட்டகு ழிக்கு ளாவிந
டுக்கத்தின்வி ழக்கை யாவரும் விடவேதான்
இட்டத்தது விட்டி டாவகை
மைப்பட்டுழல் பட்ட வீயென
எய்த்துப்பிர மித்து நாடொறு மறிவேபோ
யெட்டட்சர நிட்டை ஞானம
தற்றுக்கதி கெட்ட பாவியென்
ரட்சைப்பட ரட்சை நீயருள் புரிவாயே
துட்டக்கள விட்ட ராவணன்
முட்டிச்ச ரிட்ட போரிடை
துக்கப்பட பத்து நீண்முடி யடியோடு
சுற்றித்துகள் பட்டு வீழவி
சித்ரத்தொடு யுத்த மாரிக
டொட்டப்பின ரக்கர் யாரையு முதலோடு
கட்டப்படு பத்ர காளிதன்
வட்டத்தினி நிர்த்த மாடுக
ளத்திறபலி யிட்ட ராகவ நெடுமாலே

கற்றைக்கதிர் விட்டு வீசிய
செச்சைத்தெரு ரத்ன மேதிகழ்
கச்சித்திரு வத்தி யூர்வரு பெருமாளே. (எ௪)

சுவாமி-வரதராஜப்பெருமாள். தாயார்-பெருந்தேவித்தாயார்.

பூதத்தாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருவட்டபுயகரம். (௨)

தனன தத்தன தனன தத்தன
தனன தத்தன தனன தத்தன
தனன தத்தன தனன தத்தன—தனதானு.

அருமறைக்கடலை யளவி டற்குமரி
தரிதெ னிற்பெருகு மதனி னுட்பொருளை
யளவி டுத்தறிவ தெவர்க ளுக்குவச மதுகாணு

தயன திட்டமறை பறிகொ டுத்தனனெ
லமர ருத்ரமுனி வரப்ர மத்திரள்க
ளறிய விற்றைவரை யொருவர் சக்யரல ரடியேனே

இருளறைக்குருட னுணர்வ தெப்படிமு
னவர்பு ரைத்தபொரு ளவரெ டுப்பதல
தெவரெ டுக்கறிவ ருனது சித்த(ப) கி மைகள்யாவு

மெவர்க் குத்தறிய லாமு னக்கொழிய
விருக ரைப்பசல வெண்ம யக்கமுறு
மெளிய னுக்கினிய [illegible] வப்பொருளை யருள்வாயே

நிரைநி ரைத்தொழு [illegible] ட்டமிட
வலகை கட்டமி[illegible] கொட்டமிட
நிசிச ரப்படை[illegible] டமடத்துவரு சமரு[illegible]

தெளிதெ ளித்தருள முடிப டிப்புரள
வுரமு மற்றவர்கள் சிரமு கெட்டுட னு
நிணமு டைக்குருதி சுழியெ டுத்தெறிய வமராடு

வரச ரித்ரதர ரணமு கப்ரபல
ரகுத லப்ப்ரௌட தசர தப்பிரிய
வனச லக்குமிமெய் சகித லட்சணிக நெடுமாலே

மடன்மு றுக்குவிரி மலர ணித்தவிசி
லனமெ டப்பெடைக ளரசி ருக்கும்வள
மருவு மட்டபுய காந கர்க்குள்வளர் பெருமாளே. (௭௫)

சுவாமி - சக்கரராஜர். தாயார் - பதுமவல்லி. பேயாழ்வார்
திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருத்தண்கா. ([illegible])

தனனு தனதந் தானதன தத்ததன
தனனு தனதந் தானதன தந்ததன
தனனு தனதந் தானதன தத்ததன—தனதானு.

நிலையோ வெனின்மின் போலுநிலை கெட்டதுமு
குணமோ வெனிலும் பூதவிக டித்ததுவுண்
ணெறியோ வெனிலென் போடுதசை கெட்டமல நிறைவாகு

நிறையோ வெகுசம் போகம தளிக்கினுமொர்
குறையோ வரிலன் பாதரவு மற்றதுபொய்
நிழலா முடல்கொண் டேதுபயன் மிக்கமது மலர்வாச

நலமே கெடினம் பாரொருவ ரத்னமதி
லொளியே கெடிலங் கேதுகுண நட்புறுபெண்
ணசையே கெடினன் பேதுமிலை யுற்றவுயிர் சொசொரூப

நயமே செடில்வம் பாமுடிபு மெப்படியுன்
னடியா ரடிகண் டேதொழுவ திச்சைமய
னடைநோ யதுகொண் டேதிரியு மக்னனெனை யருள்வாயே

மலைவா ழுமைபங் காளனவ சத்திலனு
தினமே பிர்மகங் காளம தெடுத்துமனை
மனைதோ றுமிரந் தேதரும பிட்சைகொடு திரியாதே

வரமே தருசந் தோடப்ரமை பெற்றமல
ரயனூர் மறைகொண் டேசமல ரிற்றுளையின்
வழிபோ யமர்திண் டாடியதி லெய்த்துநினை நினைபோது

சலியா வணஙஞ் சேலெனவ ளித்தமது
சயிடா சுரசங் காரவொரி டைச்சிகடை
தயிரா லடியுண் டோடியமு திட்டபுக ழெளியோனே

தளரா வரிவண் டோலிடம லர்த்தவிசி
லரசா டருசெங் காலனசெ ருக்கிவளர்
தடமே திகழ்தண் காவளநகர்க்குள்வரு பெருமாளே. (எசு)

சுவாமி - தீபப்பிரகாசர். தாயார் - மரகதவல்லித்தாயார்.
திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவேளுக்கை. (சு)

தனனா தத்தத் தனதன தானன
தனனா தத்தத் தனதன தானன
தனனா தத்தத் தனதன தானன — தனதானா.

ஒருகா லத்திற் றொலைவிலை நீயுள
முதனா டொட்டித் தனைவெகு காலமு
மொழியா மற்பற் பலபல யோனிக ளிடைமூழ்கி

யுருமா றிப்பொய்ப் பிறவியு ளாவது
தொழிலா யெய்த்திட் டனெனினி மேலுமென்
றுளம்வே சற்றத் திணையென வேசென்ம வளராடி

மருளாய் மத்திற் கடைதயிர் போலவு
மெரிசூழ் கட்டைக் கிடைசுவ லாகவு
மறுகா நிற்கத் தமியெனை நீவழி விடலாமோ

மகவே துக்கப் படவொரு தாய்சுக
முறுமோ கர்ப்பப் ப்ரசைகுறை தாய்செயல்
வலதே ரட்சித் தருளுவ தேகட னருள்வாயே

அருள்வா ணற்குப் பெருயுன் மேல்வினை
வருமேல் ரட்சித் தருளுவம் யாமென
வவமே செப்பிச் சமரகல் வேளையி லுதவாதே

யரரோ டக்கைக் கரிமுக னுரவர்
பிறகோ டக்கெட் டவர்பிற சேருக
ரவரோடச்சுற் றியபடை யோடிட வமரூடே

திரடோ ளற்றற் றிடையிடை யாயிரம்
விழவே சக்ரப் படைவிடு சேவக
செயசா ரித்ரத் திருமலை யோயெமை யடையோனே

தெளிவார் பட்டர்க் கொருமகள் சூடிய
திருமா லைக்குப் ப்ரியதர மேபுரி
திருவே ளுக்கைப் பதியினின் மேவிய பெருமாளே. (எஎ)

**சுவாமி** - முகுந்தப்பெருமாள். **தாயார்** - வேளுக்கைவல்லி நாச்சியார். பேயாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருப்பாடகம். (ரு)

தானதத்த தானதத்த தானதத்த தானதத்த
தானதத்த தானதத்த—தனதான.

சூதுமற்று வாதுமற்று நாளுமற்று நாசமற்று
தோடமற்று வேடமற்றெ நாளுவாயே
சூழ்சடத்தி னூடடைத்த காரிருட்டு ளேயொளித்த
சூரியப்ர காசமொத்த தொருஞானம்
துரைக்கொ ணாதுரைக்கி னீயுமற்று நானுமற்று
யாதுமற்ற பாழிடத்தில் வெளியாகும்
யாவர்கற்பர் யாவர்நிற்பர் நீநினைக்கி லாகுமற்றை
யார்நினைக்கி லாகுமத்தை யருள்வாயே
ஆதியத்த னேயெனக்கை யானைபற்றி யோலமிட்ட
நாளழைத்த போதிலுற்று விரைவாகி
யாழியைக்க டாவியக்க ராமடுத்து வாயறுத்த
நாதரட்சை யேவிளைத்த பெருமானே
பாதபத்ம நாதவித்தை காரணச்சர் வேசசிற்ப
ராபரச்சொ ரூபநித்ய நெடுமாலே
பாளைவிட்ட தாழைநெற்றில் வாளைதத்தி யாளையெற்று
பாடகத்தின் மேவுமிக்க பெருமாளே. (எ௫)

சுவாமி - பாண்டவதூதப் பெருமாள். தாயார் - உருக்குமணிதேவி.
பூதத்தாழ்வார் திருமழிசையாழ்வார் பேயாழ்வார்
திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருநீரகம். (௬)

தான தத்தன தத்தன தந்தன
தான தத்தன தத்தன தந்தன
தான தத்தன தத்தன தந்தன—தனதானா.

ஊனு டைச்சுவர் வைத்தறி லென்புகள்
தூணி றுத்திவ ரிச்சுந ரம்புக
ளூடி றுக்கிய மெத்துமி கும்பல பலகோடி

ரோம கற்றைகள் கட்டியொ ரொன்பது
வாசல் விட்டும றைத்தகொ டுஞ்சிறை
யூடெனைச்சிறை வைத்தனை பெண்டிரு மவரோடே

சான்மு ளைத்தன முட்டுவி லங்கது
காலி விட்டுநெ ருக்கிவ ளைந்தவர்
காவ லிட்டனை நிக்ரக முஞ்சொல முடியாது

கான கத்திலு யர்ப்பகை வென்றொரு
சீதை யைச்சிறை விட்டருள் கண்டப்ர
கார நட்பொர் ரட்சைபு ரிந்தெனை யருள்வாயே

யானை யச்சுத விட்டுணுவெ னுந்திரு
நாம முற்றுமு ரைத்திட நொந்துமு
னோதி வத்துவை ரட்சைபு ரிந்தரு ளெனவேநீ

யாழி யைக்கடி தெற்றிய தின்பினை
ரோடி லட்சிமி பட்சியொ டுங்கடி
தாக வப்பொழு துற்றினி யஞ்சலெ யெனவேபோர்

நீனி றப்பக டொத்தவி டங்கரின்
வாய றுத்துடன் ரட்சைபு ரிந்தசி
னேக ரட்சக பத்தர்கள் பங்கினி துறைவோனே

நிலா வட்டமுற் றுக்குவி ரிந்துசல்
லாரநெட்டிதழ் விட்டல ருந்திரு
மீர சுந்தரியாதித்துவி ளங்கிடு பெருமாளே. (எ௬)

சுவாமி - ஜகதீசுவரர். நாயார் - நிலமங்கை நாச்சியார்.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருநிலாத் திங்கட்டுண்டம். (எ)

தனதனத் தந்தத் தந்தத் தனந்தன
தனதனத் தந்தத் தந்தத் தனந்தன
தனதனத் தந்தத் தந்தத் தனந்தன—தனதான.

மகளிர்காற் செம்பொற் றண்டைக் கும்விஞ்சிய
களபவார்க் கும்பக் கொங்கைக் குமிங்கித
மயர்வுபூட் டுங்கைச் செண்டுக் குமஞ்சரி தொடுமாலை

மலர்கள்சூட் டும்பொற் கொண்டைக் கும்வஞ்சக
களவுசாட் டுங்கட் கெண்டைக் கும்ரஞ்சித
மதுரவாக் கின்கற் கண்டுக் குமன்புறு மயலாகி

மிகவும்வேட் டின்புற் றின்புற் றலைந்தவர்
பிறகுபோய்க் கெஞ்சிக் கெஞ்சித் தளர்ந்ததி
விரகமாய்க் கொஞ்சிக் கொஞ்சிச் சுகங்களி னிடைமூழ்கி

வெறியனாய்த் துன்பப் பங்கப் படும்பழ
வினையேற் கென்றைக் குன்சித் தம்வந்தினி
விரைவிளைட் கொண்டிட் டின்பப் பதாம்புயமருள்வாயே

திகுடதோத் திந்தித் திந்தித் திமிங்கிண
செகுணதோட் டிங்குட் டிங்குட் டிகுண்டிகு
திமிததாத் திந்தித் திந்தித் திதிங்கண வெனமீறு

சினநடாத் துஞ்சற் பந்தற் படந்தனி
ணடனமிட் டுஞ்சித் ரம்பொற் பதம்புய
சிலைவைவாட் டண்டத் தஞ்சக் கரம்புரி யுடையோனே

ககனமேற் றங்கப் பொன்பெற் றிலங்கிய
சிகரமேற் சந்தப் பொங்கர்த் தடந்திகழ்
சுரையில்வாய்க் குஞ்செய்க் கண்டற் பரம்பினி மதகூடு

கடிதுபோய்க் குந்திக் குந்தித் தவழ்ந்திடு
முடிவெள்வாய்ச் சங்கச் சங்கக் குலம்புடை
கவிநிலாத் திங்கட் டுண்டத் திருந்தருள் பெருமாளே. (௮0)

சுவாமி - நிலாத்திங்கட்டுண்டத்தான். தாயார் - நேரொருவரில்லா வல்லி. திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்

---

## ஸ்ரீநூரகம். (அ)

தானதத்த தந்தன தானதத்த தந்தன
தானதத்த தந்தன—தனதான.

மானம்வைத்தி டும்பொறி தாமடைத்தொ ரைம்புல
வாயடக்கி நன்புல வழியாகும்

வாசலைத்தி றந்திருள் மூடுமிப்ர பஞ்சக
மாய்கையைக்க டந்துண ரொளியான

ஞானபத்தி யென்றிடு தீபம்விட்டு விந்துவி
னாதமொத்து நின்றது வெளியாமே

னொருத்த னென்பது நீயொருத்த னென்பது
நாசமற்றி டுந்திற னறிவாரார்

ஆனசொற்பெ றுஞ்சட கோபர்மெய்த்த சங்கணி
யாரமிக்க செண்பக மகிழ்மாற

நாரணப்பெ ருந்திரு வாய்மொழிப்ர பந்தமொ
ராயிரச்செ ழுந்தமிழ் புனைவோனே

ஊனமற்றி லங்கிய பேருமற்ற றிந்திடு
மூருமற் றகண்டமு நிறைவோனே

ஓலமிட்டு வண்டிசை பாடுநற்ற டந்திக
ழூரகத்தி னின்றருள் பெருமாளே. (அச)

ஸ்வாமி - திருவிக்கிரமர். தாயார்-அமுதவல்லித்தாயார். திருமங்கை யாழ்வார் திருமழிசையாழ்வார் மங்களாசாசனம்.

## திருவெஃகா. (கூ)

தனன தானன தந்தன தானன
தனன தானன தந்தன தானன
தனன தானன தந்தன தானன—தனதானு.

அானு நான்முக னும்பல தேவரு
முனது மாயையெ னுங்கடன் மூழ்கின
ரடிய னேனும ழுந்தின னலதிற் சரியாமே

மலைகொள் வாரிதி யின்கணின் மூழ்குதன்
மலையும் வார்மண லுஞ்சரி யாமதி
லதிக மேதினி நின்செயல் வேதமு மறியாதே

உருவ மாமெனு மொன்றுரு வோவல
வருவ மாமெனு மொன்றரு வோவல
வொளிய தாமெனு மொன்றடி யேனறி குவதேதோ

வுனது மாக்ருபை யுண்டெனில் வாழ்வர
தொழியி லோநர கம்புகு வார்திரு
வுளமெ னேவிவி ரண்டினி லேதருள் புரிவாயே

இரணி யாசுரன் மைந்தனே டாதியி
லெனது பேருரை யென்புக ழேமொழி
யெனது வேள்விசெ யென்கதி மேவென நவில்போதே

விதுத காதென நின்பெய ரேசொல
வரிந மோவென வங்கவ னரவ
னெவன டாவவ னெங்குள னீயுரை யெனவேதான்

திருகு கோபமெ ழுந்திட வோதிய
சிறுவன் வாய்மொழி யின்படி யேதறி
சிதற வேநர சிங்கம தாய்வரு நெடுமாலே

தினக ரோதய மென்ப்ரபை வீசிடு
கனக மாமணி மண்டப மேதிகழ்
திருவெஃ காநக ரந்தனின் மேவிய பெருமாளே. (அஉ)

**சுவாமி** - சொன்னவண்ணஞ்செய்தபெருமாள். **தாயார்** - கோமள வல்லிநாச்சியார். பொய்கையாழ்வார் பேயாழ்வார் திருமழிசை யாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்காரகம். (கO)

தான தத்தன தான தத்தன
தான தத்தன தான தத்தன
தான தத்தன தான தத்தன—தனதான.

மாநி லத்தினின் மானி டப்பவ
மேயெ டுக்கரி தாமெ டுக்கினல்
வாய்மை புத்திவி வேக மத்தரி தருவானல்

மான மற்றெழு ஞான முற்றரி
தாகு முற்றிலுன் மீது பத்திம
ருது நிற்கரி தாகு நிற்கிலொர் சொசொரூபம்

ஆன வித்தையி லேந டக்சரி
தாந டக்கில வாவ டக்சரி
தாம டக்கின்ம காப்ர பத்தியு னடியார்பா
லாத ரித்தவர் தாஸ்ய நிட்டைக
ளேகி றுத்தரி தாகி றுத்தில
தேப ரப்பொரு ளாகு மிப்பொரு ளறிவாளர்
ஈன முற்றக ராவெ நிர்த்திடு
போது சட்டழி வாய்ம டுத்தனில்
யானை ரட்சக னுர்ப ரப்ரம முதலானோர்
யாரெ னத்தனி யோல மிட்டொரு
மூலம் ரட்சியெ னுதி னைக்குமு
னுதி ரட்சக னென னக்கடி தருள்வோனே
கான றைத்துள சீத ளப்புய
பூமி லட்சுமி வாச நட்புப
கார வித்யைவி னேத நித்யச ருவசேடா
கார ணப்பிரிய வார முற்றது
ரோப தைக்கபி மான ரட்சக
கார கத்தினில் வாழ்வு பெற்றருள் பெருமாளே. (அ௬)

சுவாமி - கருணாகரப்பெருமாள். தாயார் - பத்மாமணி நாச்சியார்.
திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்காரிவானம். (௧௧)

தானதன தத்தன தந்தன தானதன தத்தன தந்தன
தானதன தத்தன தந்தன—தனதான.

ஆராதனை யர்ச்சன னின்சரண் மீதேசெய்த வர்தனை யுஞ்சிவ
னார்வார்சடை யுற்றத றிந்தது மதலாதே

யாபாதக சங்கிலி யன்றன மாதோடவள் புத்ரியை நம்பும
சாமினி ரட்சைபு ரிந்தது மிதனோடே

சிர்சிதைத னத்தில டைந்திடு காகாசுர ரட்சக முந்தனி
தேறுதுக திக்கித ரங்களை நினைவோர்கள்

சீதேவியை விட்டுத னம்பெற மூதேவியை வைத்துவ ணங்குவ
தேபோலுநி னரட்சக மந்திர மறிவாரார்

நாராயண சத்தநெ டுஞ்செவி கேளாதும றைத்திடு கிங்கிணி
நாவாடுபு லக்கன கண்டைய னெறிநீர்மை

நாடாதமு றைக்கும டுஞ்சிசு பாலேசன்வ சைக்கும ருந்தமிழ்
நாவீரர்க லக்கும ருங்கதி யருள்வோனே

காரானைய ழைக்குமு னஞ்சுடர் பேராழிவி டுத்தடல் கொண்டக
ராவாயைய றுத்தரு ளும்பரிய நெடுமாலே

காறுறுத டத்திலெ ழுந்தவ ராறுவுப டப்பைவ ளர்ந்திகழ்
கார்வானந கர்க்குள்வி ளங்கிடு பெருமாளே. (௮௪)

சுவாமி - நவநீதசோரப்பெருமாள். தாயார் - கமலவல்லிநாச்சியார்.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## ஸ்ரீநக்கள்வனூர். (௯௨)

தானதன தனதான தையன தனனதன
தானதன தனதான தையன தனனதன
தானதன தனதான தையன தனனதன—தனதான.

நீரினள றதுநீரி னல்லவோ வமையுமன
தோடநெறி மனசோடு மல்லவோ தவிர்வதுமுன்
னீபுதவு பெருமாய்கை யல்லவோ சனனமது களைவாரார்

நீசனென்னை யருளாது தள்ளினு லெனதுகுறை
யேதுபிற விசுபாவ மல்லவோ தினமுநம
னீதிகெடு முறையோடு கொல்லுமா றதுவுமிரு நிலமீதின்

நாரமுற வருதாயர் பல்லயோ னிகளுமிகு
கீழ்நரக மெனும்லோக முள்ளவா றுகண்முழுதும்
நானெனமு னறியாத வல்லவே யெனதுதொழி லவசார்ம்

நாடுமுறை மனம்வாய்மை செய்கையா னவைகொடிய
நீயுமினி யிவலாது செய்யுமா றெனநிரய
நானுமிகு பரநீயு முள்ளகா ரியமுலகு சிரியாசோ

ஆரணிபொ னபிராம வல்லிமு வுலகுதரு
பூரணிந லயனுதி வில்லமார் சடையரனொ
டாமுயிர்பு ருடகார செல்விநா ரணிகமலை மலராகு

மாசனிப னகசாயி தெய்வநா யகிசருவ
காரணிமெய் கிருபாளி வைதிகா திசகமலை
யாசிருத சர்வசேடி முல்லைவா ணகைநிலவு சருதோகை

வார்கெழுப்ர ளயகால வெள்ளமீ தகிலசெகம்
யாவுமடை பயில்வான பிள்ளையோ திமமருவு
வாசமது மலர்மார்ப குல்லையா பரணமணி மலிதாமா

வாமதச ரதராம புள்ளிநா யகசருவ
லோகசர ணியநேய செய்யவாய் பதகமல
வாவிவள வயன்மேவு கள்வனூர் தழையவளர் பெருமானே.

சுவாமி - ஆதிவராகப்பெருமாள். தாயார் - அபயநாயகியார்.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

திருக்கடிநகர் - திருப்பவளவண்ணம். (கரு)

தனதன தத்ததான தனதன தத்ததான
தனதன தத்ததான தனதன தத்ததான
தனதன தத்ததான தனதன தத்ததான—தனதான.

மனநிலை நிற்கவேணு மறிவுமி குக்கவேணு
முறையின டக்கவேணு மடிகள்வ ழுத்தவேணு
மலர்களி றைக்கவேணு மெனநினை வுற்றி டாது பலகாலும்

மனைகளை பெக்கவேணு முடைகளு டுக்கவேணு
மணியணி மெய்க்கவேணு மனைவியொ ருத்திவேணும்
மசவுபெ ருக்கவேணு வயிறுவ ளர்க்கவேணு மிவலாதே

தனமது மெத்தவேணு மெனநினை வுற்றொர்காம
வெகுளிம யக்கமூடி யுணர்வது கெட்டுவேறு
தனையும யர்த்துளான வுனையும யர்த்துவீணி லொழியாதே

சனனமெ டுத்தபாவ மதனைமு ழுத்தஞான
மெனுமுனை பெற்றவாளி னிடறியு ருக்கமோடு
சததள பத்மபாத மலர்வழி பட்டுவாழ வருள்வாயே

வினவிடு சித்தகார விசயமி ருத்தநீர
வடைபுமி டத்தகார வடியர்வ ரப்ரகார
வினதைவ ரக்குமார சனகச னற்குமார வரதேயா

விடயம்வி ளைத்தலீல கவுசலை பெற்றபால
விரசைந திப்பிரவாக பரசுக திப்ரதாப
விதிசிவ சித்தராய கடலமி யற்றுமாய நினைவோர்பால்

அனுதின நித்யவாச கனகவெ யிற்ப்ரகாச
பரமப தப்பிரதேச சரமப தப்ரவேச
வதிகச கத்திரநாம துளசிப வித்திரதாம நெடுமாலே

யசரரு லட்ரகால வமரரு லக்ருபால
வகிலசெ கச்சொருப வரிவளை பத்திசோபை
யவிர்மதி யொத்துலாவு கடிநக ரத்தின்மேவு பெருமாளே.(௩௬)

சுவாமி - ஸ்ரீபவளவண்ணப்பெருமாள். தாயார் - பவளவல்லி
நாச்சியார். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருப்பரமேசுர விண்ணகரம். (௩௭)

தனதானன தன்ன தனத்தன தானன
தனதானன தன்ன தனத்தன தானன
தனதானன தன்ன தனத்தன தானன—தனதானா.

தலைநாளினின் முன்னை விதிப்படி யாலொரு
பதுமாதமு மன்னை வயற்றினி லாயிது
தரைவாய்மக வென்ன வுதித்தது போயிள மையும்வேறு

தடுமாறியெள வன்ன மிகுத்தது வாய்முது
வயதாகிய மன்ன துவிட்டொரு சாவது
தலையாகிய மின்ன வவத்தைகண் மீறுமிவ் வுடலாலே

அலையாதலை சன்ம மெடுத்ததி நாள்வரை
தொலையாதினி யென்ன செயக்கட வேன்முன
மறியாதுசெய் புன்மை பொறுத்தரு ளாததென் மணிமார்பி

னகலாள்குறை தன்னை யுறைத்தன ளேலுமென்
னடியாரது பண்ண விலைப்பணி ளலுநல்
லதுகாரிய மென்னுமுன் ரட்சக மானது பழுதாமோ

கொலைவாய்கொடு கொம்மை முலைப்புடை கீறிய
மலர்மாமகள் சந்நிதி பெற்றத னலொரு
கொடியானது சென்னி பிழைத்திட வேக்ருபை புரிவோனே

குருகாபுரி தன்னி லுதித்தர வாகிய
புளிநீழலின் மன்னி யிகத்தடி யரரது
பொருமொழிவினை சின்ன பினப்பட வேங்லை — யிலவாகும்

பலவாகிய சின்ன மதப்பர வாதிய
ரவர்நூலவர் தம்மை யழித்திட வேயொரு
பழமாமறை தன்னை விரித்துணர் வான்மிகு — மகிழ்மாறர்

பரமாமென வுன்னை மதித்தினி தாகிய
திருவாய்மொழி சொன்ன முதற்பொரு ளேவர
பரமேசுர விண்ண கரத்தினின் மேவிய பெருமாளே. (௮௭)

**சுவாமி** - வைகுந்த நாதர். **தாயார்** - வைகுந்தவல்லி நாச்சியார்.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருப்புட்குழி. (௧௫)

தானுந் தனுதன தத்தன தந்தன
தானுத் தனுதன தத்தன தந்தன
தானுத் தனுதன தத்தன தந்தன—தனதானு

பாராட் டுவார்மக வைத்தம தன்பொடு
தாராட் டுவார்மடி வைத்தொரு சங்கொடு
பாலூட் டுவாரித மித்தச வுந்தரம் — வருபோது

பாடேற் றுவார்பெண னச்சொரு பம்பெறு
பேயேற் றுவாரது பெற்றவு டன்கிருபை
பாழாக் குவார்நிலை கெட்டவு டம்புபொன் — ளிலையாக

ஆரோக்ய மாகநி னைப்பர்வ டிந்திடு
நீரோட் டமாகநி னைக்கிலர் சிந்தையி
தாகாப் பினுலழி வுற்றிடு மெங்களை — யருள்வாரா

ராகாப் பொலாமக ரைத்தரு தந்தைக
ஞானைக் கிலானவர் குற்ற மமைந்தரை
யார்நீக் குவானென விப்புலை யன்றனை　　யருள்வாயே

ஏராட் சாதிமு தற்பொருள் கொண்டவ
காரார்த் தமாயத னிற்றுய வென்றவு
காரார்த் தமாய்நிலை மெய்த்திரு மந்திர　　மதானாய்

லோராத் துர்வாதிய ரைத்திறல் கொண்டருள்
பூதூர்க் குநாதர்செ கத்ரய மூன்தொழு
மோர்பாஷ் யகாரர்வ ழுத்தய ளார்ந்தரு　　ஞானவோனே

போராட் டமாடுக ளத்தி லடர்ந்திடு
மாராட் சசாதியர் நிக்ரக சங்ரம
பூதாத் மநாதவி முத்தர்வ ணங்கிடு　　திருமாலே

போகோத் தமாதிட சற்குண சம்ரம
வேதாப் பியாசவி லட்சண சுந்தர
போரேற் றுநாயக புட்குழி வந்தருள்　　பெருமாளே. (அஅ)

**சுவாமி** - விஜயராகவப்பெருமாள். **தாயார்** - மரகதவல்லிநாச்சியார்.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருநின்றவூர். (கசு)

தானதந்த தானதந்த தானதந்த தானதந்த
தானதந்த தானதந்த—தனதானு.

நாரமெங்கு மேநிறைந்து நீயிருந்து மானிடங்கள்
நாசமன்றி யேபலன்க　　ளவைகாணு

நாடுகொண்ட வீடுபெண்டிர் மாடுதந்தை தாயர்மைந்தர்
ஞாபகங்க ளானபந்து　　விவர்கூடி

ஆரிருந்து மாவதென்கொ ளுனிருந்த வாறுமந்தர்
யாமிநின்ற வாறுமஞ்சி யழிதேக
மாகிநின்ற வாறுமந்த்ர ஞானசிந்தை யாலறிந்த
தாவதன்றி மோசமம்பி னறிவாரார்
பாரிலம்ப ரீடர்முன்று ரர்வாசர்வெம்பி யேவெகுண்ட
பான்மைகண்டொ ராழியுந்த வதனாலே
பாறிநொந்து காவலின்றி மீளவந்து ளீதியன்பர்
பாடுநின்று தாள்வணங்க வருள்வோனே
வீரதுங்க ராஜசங்க மாமுகுந்த ராஜசந்த்ர
வேதமந்த்ர யாகதந்த்ர நெடுமாலே
வேரிவண்டு மாயலங்க ளுழலங்க்ரு தாசுகந்த
மேவுநின்ற வூரிநின்ற பெருமாளே. (கசு)

சுவாமி - பக்தவச்சலர். தாயார் - என்னைப்பெற்ற தாயார்.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவெவ்வுளூர். (கஎ)

தைய தந்தன தனன தானன
தைய தந்தன தனன தானன
தைய தந்தன தனன தானன—தனதான.

தெய்வ மொன்றலா லுபய மோவிலைச்
சைய மங்கைநா யகனு மாமலர்ச்
செய்ய முண்டகா சனனு நீயுமொத் தொருமூவர்
செய்தி கொண்டகா ரணம தேதெனிற்
பொய்மெய் ரண்டினு லறிய லாகுநற்
செய்கை மந்த்ரமா சமயம் வேதனுக் கிலேவேறு

..யில் வந்தசோர் ப்ரமக பாலவத்
தொல்லை யொன்றினை தவிர்கி லாதவற்
கைய முண்டுவாழ் தொழிலை நீதவிர்த் தனையிது

சையி லங்குமா மலக மாமனத்
துள்ள றிந்தபே றறிவர் வீண்மதக்
கள்வ ரெஞ்செய்வா ருனது மாய்கைவிட் டிவர்போ

..ய லென்றனீ தையையி ராவணப்
பையல் கொண்டசோ கவன மீதுவைத்
தல்லல் கண்டநா ளவனை வேரறக் கிளையோடு

சள்ளி லங்கைமா நகர வீதியிற்
றுள்ளி நின்றுபே யகவ வேநிணச்
சவ்வு தின்றுகூ ளிகளு லாவிடக் களமீதில்

எய்ந்தி நின்றபோ ரிடைகி ரீடமற்
றையி ரண்டுகீழ் சிதற வாளிவிட்
டெய்து வென்றுவீ டணர்ப்ர தாபபட்

டெல்லை கண்டுசா னகியை மீளவிட்
டொல்லை தம்பியோ டனும னோடுமுற்
றெவ்வுள் வந்தவா விசய ராவகப் பெருமானே. (௩௰)

சுவாமி - வீரராகவப்பெருமாள். தாயார் - கனகவல்லித்தாயார்.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருநீர்மலை. (௩அ)

தனதன தானதத் தனந்த தந்தன
தனதன தானதத் தனந்த தந்தன
தனதன தானதத் தனந்த தந்தன—தனதானா.

ஒருவிர சாநதிக் கிடைந்தொ ழிந்துன
பிரக்ருதி மாயையிற் கிடந்த லைந்திடு
முயிர்களெ லாமுமொய்த் திடுங்கொ டுங்கலி — வசமாயெ

புழல்வத லான்மனப் ப்ரபஞ்ச சந்தனை
விடுவதெ வாறடுத் தபஞ்ச விந்த்ரிய
மொழிவதெ வாறசித் துடம்ப தொன்றினை — யியல

தெரிவதெ வாறுனைத் தெரிந்து நின்பத
மடைவதெ வாறன்ரட் சகந்த விர்ந்தொரு
செயலிலை யாதலிற் பிறந்தி றந்தலை — வதுதானே

திரமிதி ஞறொருத் தனந்த வஞ்சக
னறிவிலி பாவிகெட் டவம்ப னுண்செய
றெளிவதெ வாறுபத் திதந்து நின்சர — ணருளவாயே

அருவுரு வாகும்வத் துவென்று நின்றறி
வழிபர வாதியர்க் ககங்கு றைந்திட
வருமறை நால்விதத் தையுஞ்செ ழுந்தமி — ழியலாலே

வருடிரு வாய்மொழிப் ப்ரபந்த மந்திர
சொருபுரு வாரம்வத் துவென்று நின்றிரு
வடிமிசை பாடுமுத் தர்நங்கள் செண்பக — வழமா

வருகரு ணேசசிற் பரம்ப தந்தரு
தசரத ராமசக் ரதுங்க பங்கச
வனிதைச லாபமுக் யமந்திர தந்திர — நெடுமால்

வளவய லூடுமுத் துமிழ்ந்து சங்கின
மதியினி லாவெறிப் பவெங்க ணுந்தவழ்
வருதிரு நீர்மலைக் குகந்து நின்றருள் — பெருமாளே. (கூ௪)

சுவாமி-நீலமுகில்வண்ணர். தாயார்-அணிமாமலர்மங்கைநாச்சியார்.
பூதத்தாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருவிடவெந்தை. (௩௬)

தனதந் தத்தன தான தானன
தனதந் தத்தன தான தானன
தனதந் தத்தன தான தானன — தனதான

சிவனும் பித்துடை வாண னுலுணர்
வறிவின் றிப்படை யேறி னுனுன
செயல்கண் டப்பொழு தேடி னன்மிக விதலாதே

தெளிவின் றிப்பிரம தேவ னரிடை
யரைவஞ் சித்தவ னுதி நாளுள
திறலும் பட்டமும் வீடி னனொரு மகவானே

அவனுஞ் சிற்றறி வாண்மை யால்வெகு
நிரையின் கற்பெரு மாரி தூவிநல்
லவியுந் திட்டமு மாறி னனொரு தமியேனே

வறிவுஞ் சற்றில யாகை யாலவ
ரவர்சிந் தித்தறி யாத சேவடி
யதுகும் பிட்டுயிர் வாழு மாறெவ னருள்வாயே

புவனந் தட்டழி யாம லேமணி
மகுடம் பத்துடை யானை யேயெதிர்
பொருதின் றெய்த்தனை நாளை வாவென நவில்போதே

புகழுங் கெட்டவ னண்மை வீரமு
மரசுங் கெட்டவ னேக வேநகை
புரியின் பக்கருபை வாரி யேயெமை யுடையோனே

எவரந் தத்தினில் ராம காவென
முதல்ரண் டக்கர மோது வார்பர
விகமும் பெற்றர சாள வேயருள் புரிவோனே

யிளவண் டர்ச்சிறு தாழை மாமடல்
குருகென் றெற்றிவ ரால்க டாவிடு
மிடவெந் தைப்பதி வாழ மேவிய பெருமாளே. (கூஉ)

சுவாமி - நித்யகல்யாணர். நாயார் - கோமளவல்லிநாச்சியார்.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

திருக்கடன்மல்லை. (மாபலிபுரம்) (உ௦)

தனன தனதன தத்த தந்தன
தனன தனதன தத்த தந்தன
தனன தனதன தத்த தந்தன — தனதானே.

உடலொ டுயிரிடை நட்ப றிந்திடின்
மகவு மனைகிளை சுற்ற மென்றவ
ரொருவ ருறவிலை யுற்ற திங்கிது வுறவான

வுரிய தருமம்வெ றுத்து நின்றவர்
குருவி னெறிமுறை தப்பி நின்றவ
ரொழிவி லருநர கத்த ழுந்துவர் திடனுமுன்

அடிய ரடிகள்வ ழுத்தி யங்கவர்
ப்ரதம சரமப தத்த டைந்திடு
மகர முதலுக ரத்தி னின்றெழு பொருளாகு

மவைத மறிவிலி ருத்து கின்றவர்
பெறுவர் கதிகளெ னக்கு வஞ்சக
மலது பிறிதிலை ரட்சை கொண்டெனை யருள்வாயே

கடல்கள் சுழலவெ டுத்தெ றிந்திடு
திரைகள் சுழலம டுத்த வெண்டிசை
கடைகள் சுழலவி றுக்கும் வெங்கண பணசேட

கயிறு சுழலுதி றுத்து மந்தர
திகிரி சுழலநெ ருக்கி யன்பொடு
கடையு மமுதுதி ரட்டி யன்றரு ணெடுமொ

வடிவில் கடன்மலை யிற்பொ னம்புய
மலரு ணடியிணை யிற்பு னைந்திட
வலிய வுவரியி றைத்து நொந்தநின் வெரு

வயது கிழமைய டுத்த பின்புட
லவசம் வருமொரு புட்க ரன்றொழு
மருவு தலசய னத்து றைந்தருள் பெருமாளே. (௪௫)

ஸ்வாமி-நித்ய தலசயனத்துறைவார். தாயார்-நிலமங்கைநாச்சியார்.
பூதத்தாழ்வார் திருமழிசையாழ்வார் மங்களாசாசனம்.

## திருவல்லிக்கேணி. (௨௧)

தனதையத் தானன தானன
தனதையந் தானன தானன
தனதையத் தானன தானன—தனதாந.

அருவல்லப் பேருரு வானதவ்
வுருவல்லக் காணரு வானதொ
ரலியல்லத் தானவ னானது பரமாகு

மருவல்லப் பாருரு வானதெல்
லொளியல்லக் காரிரு ளானதி
னருளல்லக் கோபமொ டானது கிடையாத

பொருளல்லத் தேடரி தானதுள்
ளிலதல்லப் பேசவொ ணாதது
புலனல்லப் பூதமு மானதன் மயமீதின்

புகழெல்லைக் கேதென லாமிதை
யெவர்சொல்லப் போமினி மேலொரு
புகலில்லைப் பாவியை யாள்வது கிருபைதானே

ஒருபுள்ளைக் கீறிய சேவக
வொருபுள்ளைக் கேதின மேயவ
வொருபுள்ளைக் காவென வேயருள் புரிவோனே

வுணருள்ளத் தேயறி யாதவ
வருபொய்யற் கேபொய னானவ
வுறுமெய்யற் கேமெய னாகிய வரவோனே

திரைதள்ளிப் பாய்புன லூடெதி
ரெதிர்துள்ளிப் பேய்வரி வாளைகள்
செறிவுள்ளக் காலிடை யேவிழ மடநாரை

சிறைபுல்லுப் பேடையொ டேகதிர்
விளைசெய்யிற் றாவி யுலாவிடு
திருவல்லிக் கேணியின் மேவிய பெருமாளே. (கூ௪)

சுவாமி - பார்த்தசாரதிப்பெருமாள். தாயார் - உருக்குமணிப்
பிராட்டியார், பேயாழ்வார் திருமழிசையாழ்வார்
திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருக்கடிகாசலம். (சோழசிங்கபுரம்) (உஉ)

தனதன தந்தன தனதன தந்தன
தத்தா னத்தன தத்தா னத்தன
தனதன தந்தன தனதன தந்தன
தத்தா னத்தன தத்தா னத்தன
தனதன தந்தன தனதன தந்தன
தத்தா னத்தன தத்தா னத்தன—தனதான.

மறைமொழியந்தணர் தவறியி ழிந்தகு
லத்தீ மைத்தொழில் கற்பார் பற்பல
வுயர்குல வங்கிச ரிழிகுல ரென்றவ
ரிற்கீழ் பட்டுந டப்பார் முற்றவு
மனுமுறை மங்கிந லரசர்பெ ரும்பொரு
ளுக்கா சைப்பட நிற்பூர் தற்புரு — டனைவினை

மனைவியு நிந்தனை புரிகுவண் மைந்தர்கள்
பெற்றோ ரைச்சின விந்தா டிப்பர்கள்
தருமமி ழிந்திடு மதர்மமு யர்ந்திடும்
மெய்க்கா மப்பசி மிக்காய் நிற்கும்வினை
மழைபெய லுங்கெடும் விளைவுகு றைந்திடும்
முற்பா சத்தினை யற்றோர் நச்சுவர் — மனையாளை

இறைகுரு மந்திர வுணர்வு மறைந்துந
சிப்பார் சத்வகு ணத்தோர் மட்கிய
தமகுண முந்துவர் சவையில்வெ றும்பொய்கள்
மெய்ப்பா மிக்கப ணத்தா னற்குல
மெளியவர் நைந்திட வலியவர் தஞ்சொல்வ
ழக்கா முற்றப சுப்பா லற்றிடி — தருபேறு

எதிர்சம யங்களு ளுடையதின் விஞ்சவெ
டுப்பா மொய்ந்தக லிக்கா லத்தியல்
பவையெனில் வஞ்சக னுனதுபெ ரும்புக
ழைப்பா விப்பது னேச்சே விப்பதேவ்
வியல்பிது வுன்செய லலதினி யென்கொல்க
டத்தே றக்க்ருபை வைத்தே ரட்சனை — புரிவாயே

சறுவொடு கஞ்சன்முன் விடவட ருஞ்சக
டக்கால் பட்டுவி ழக்கா லிட்டவ

மருதிடை சென்றுயர் கவடுகள் ரண்டுபி
ளப்பாய் விட்டுவி ழப்பே தித்தவ
களவொடு நின்றதொர் விளவிடை கன்றையு
ருத்தே முற்கைம டுத்தே றிட்டவ விழியூடே

கனல்பொறி சிந்திட வெதிர்பொர வந்தக
ரிக்கோ டற்றுவி ழக்கோ பித்தவ
மடியி லிருந்திள முலையுயி ருண்டலை
கைத்தாய் நட்டம்வி ழத்தே விட்டவ
கனகனு டம்பிரு பிளவெழ நெஞ்சகி
ழித்தே நெற்றிந டக்கூ றிட்டருள் நெடுமாலே

அறைகுடி லின்புற முன்றயிடு கின்றத
யிர்ப்பா னைக்குட நெய்த்தா ழிக்கட
முளவழி கண்டவை களவினி லுண்டுக
ளித்தே சுற்றியொ ளித்தோ டத்தெரு
வதிலிடை மங்கையர் வருவது கண்டுபி
டித்தே மத்தின டித்தே கட்டிட வழுவோனை

பறுதுணி கங்கணிர் நிலவிய வெண்பலர்
நெட்டோ லைச்சய னத்தார் கைத்தடி
வெறியவெ ருண்டொரு கருமுக மந்திய
ணிப்பூ கந்தின்மி தித்தே றக்குலை
யதுசித றுங்கடி கையினிலி ருந்தரு
ளக்கா ரக்கனி யத்தா முத்தர்கள் பெருமாளே. (கஅ)

**சுவாமி - யோகநரசிம்மர். தாயார் - அமுதவல்லி.**

பேயாழ்வார் திருமங்கையாழ்வார் நம்மாழ்வார் மங்களாசாசனம்

**தொண்டைநாடு முற்றிற்று.**

---

# வடநாட்டுத்திருப்பதிகள். (கக)



## திருவேங்கடம். (திருமலை) (ரு)

தந்த தான தத்த தந்த
தந்த தான தத்த தந்த
தந்த தான தந்த தந்த — தனதான,

தந்தை தாய்நன் மக்கள் பெண்டிர்
பந்த மான சுற்ற மென்று
சந்தை வாழ்வெ னச்சி றந்த தமராலே

சண்ட னூரு ருச்செ றிந்த
டெங்க டாந டத்தி மண்டு
தண்ட டாவெ டுத்த டர்ந்து சமராடி

வந்த டாபி டிப்ப னென்று
கொண்ட போதெ திர்த்து நின்று
மண்டு போர்வி லக்க வங்கு வருவாரோ

வம்பி லேபி றர்க்கி ரங்கி
நம்பி யேயு ழைத்து நொந்த
வஞ்ச னேனி டுக்க ணென்று களைவாயே

உந்து போரி டத்து ணிந்த
முண்ட நீறன் மக்க ளங்கி
யொண்டி யோடி டத்து ரந்து சடராழி

யொன்றில் வாண னைக்க ரங்க
ணின்ற வாயி ரத்தில் ரண்டொ
ழிந்து வேற றுத்து கந்த நெடுமாலே

விந்தை மூவ ருக்கு ணின்ற
றிந்தி டாதொ ளித்த மந்த்ரம்
விண்டொ ராளை செப்ப வந்து வெளியானோய்
வெம்ப ணாமு டிக்கி லங்க
னந்த சேட னிற்பொ லிந்த
வெங்க டாச லத்தி னின்ற பெருமாளே. (கூரு)

சுவாமி - திருவேங்கடத்தான். நாயார்-அலர்மேல்மங்கைத் தாயார்.
திருப்பாணாழ்வார் நீங்கலாக ஒன்பது ஆழ்வார்களும்
நாச்சியாரும் மங்களாசாசனம்.

---

## திருச்சிங்கவேள்குன்றம். (அகோபிலம்) (உ)

தனதந்த னாதந்த தந்த தானன
தனதந்த னாதந்த தந்த தானன
தனதந்த னாதந்த தந்த தானன—தனதானா.

பரமுன்ற னூரொன்ற றிந்து மீசுர
னெனுமுன்ற னைமந்தெ ரிந்தும் ராவணர்
படவென்ற வீரந்தெ ளிந்து மூவருள் முதலான
பகவந்த னீயென்று கண்டும் யானைமுன்
மொழிதந்த மூலந்தெ ருண்டு மோரடி
படிவிஞ்சு சீர்நன்கு ணர்ந்து நாடொறு மழியாதுன்
வரமென்ற வேதம்ப யின்றும் யாவையு
மருள்கின்ற தாயென்றல் விண்டு நான்முகன்
வரதந்தை யாமென்று கொண்டும் யானுமுன் னடியேனாய்
வரவந்த தேயன்றி நின்சொ ரூபம
தெவர்கண்ட பேருன்றன் விந்தை மாயையின்
வகைகண்டெ னாலொன்ற றிந்து பேசவும் வசமாமோ

அருள்கொண்டு பாணந்து ரந்து மோதிடு
. கடலென்ற வேழுங்கு ழும்ப மீறிய
வசலங்க ளேழுங்கு லுங்க மாதவ ரெழுவோரு

மகிலங்க ளேழுங்க லங்க வானிடை
யதிர்கொண்ட லேழுந்தி யங்க நீண்மர
மவணின்ற வேழுந்து ளங்க வேதொளை யிடுவோனே

செருமண்டு போர்கொண்ட டர்ந்த ராவண
னொருதம்பி மேலன்றெ றிந்த வேலது
தெறவந்த போதஞ்ச லென்று வீடணர் தமையாள்வோய்

சிறைவண்டு கானம்பு லம்ப நாண்முகை
விரிபுண்ட ரீகங்க மழ்ந்து வாவிக
டிகழ்சிங்க வேள்குன்றில் வந்து மேவிய பெருமாளே. (௬௭)

சுவாமி - நரசிங்கப்பெருமாள். தாயார் - இலக்ஷுமிநாச்சியார்.

திருமங்கையாழ்வார் நம்மாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவயோத்தி. (௩)

தனனதன தாத்தன தனனதன தாத்தன
தனனதன தாத்தன—தனதான.

அனையையறி யாக்குழவி புயலையறி யாப்பயிர்க
ளரசனையி லாக்குடிகள் சுடாவிசு

மருணனையி லாக்கமல மதியினையி லாக்குமுத
மருள்சிறிதி லாத்தரும மிவலாதே

மனைவியையி லாக்குடிசில் சிறுவனையி லாப்பொருள்சள்
வழிமுறையி லாத்தவசு முதல்போல

மனனுணர்வி லாத்தனுவி னெடுதிரியு மூர்க்கெனவை
மதிவிரக மாற்றியருள் புரிவாயே

வினைவிளைவை மூட்டவெதிர் சுறுவொடுபி ராட்டிதனை
வெருவவரு சூர்ப்பநகி யழவாளால்

விறலிளைய தீர்த்தனவள் முலையினொடு மூக்கரிய
விரகமொழி கேட்டவளை நகுவோனே

பனுவலறி ரூத்ரதர வதிகரவி கோத்ரவர
பரமபத க்ஷேத்திரசவு மியமாகி

பரமபுரு டோத்தமவின் னவரிடரு லோத்தமர்கள்
பணிதிருவ யோதநிவளர் பெருமாளே. (சுஉ)

சுவாமி - சக்கரவர்த்தித்திருமகன். தாயார் - சீதாபிராட்டியார்.

நம்மாழ்வார் பெரியாழ்வார் குலசேகரவாழ்வார்

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருநைமிசாரணியம். (ச)

தன்ன தானன தத்தன தந்தன
தன்ன தானன தத்தன தந்தன
தன்ன தானன தத்தன தந்தன—தனதான.

மண்ணி னுசைதொ டுக்கவு மங்கொரு
பெண்ணி னுசைபெ ருக்கவு மிங்குநல்
வண்ண மாடமெ டுக்கவும் வன்பொடு புவியாவும்

மன்ன னுயர சுய்க்கவு மின்புட
னுண்ண பூசவு டுக்கவும் வஞ்சக
மர்ம்ம மாயைபி டிக்கவு நன்கொடு நிலமீதில்

பண்ணில் காவுமி ருக்கவும் விஞ்சிடு
பொன்னை நேடிபு தைக்கவு நெஞ்சினி
லெண்ணு மாசைக ணப்பொழு தின்பல பலகோடி

இன்ன வாறுப்ர மித்தும நந்துமிம்
மின்னின் வாழ்வைநி லைப்பென நம்பிட
வென்ன ஞானமெ னக்குவி ளைந்தது சவிராசே

விண்ணு ளோர்கள்பி ழைத்திட வுண்டசர்
மண்ணு ளோர்கட ழைத்திட மந்தர
மென்னு மால்வரை மத்தென வெம்பண மணிகோடி

மின்னு சேடனை யணக்குநெ டுங்கயி
றென்ன வாரிதி ரித்தமு தங்கடை
வெண்ணெய் போலவெ டுத்தரு ளும்பரிப நெடுமாலே

நண்ண லார்கள்பு ரத்தெரி நகுஞ்சடை
யண்ண லார்தமி ரப்பொழி யும்படி
நன்மை யாகவி ரட்சைபு ரிந்தருள் பெரியோனே

நண்ணு வால்வளை முத்தமி லஙகிடு
வெண்ணி லாவுமி ழக்குமு தந்திகழ்
நைம்மி சாரணி யத்துவ ளர்ந்தருள் பெருமாளே. (கஅக)

சுவாமி - தேவ்ராஜப்பெருமாள். தாயார் - ஸ்ரீஹரி இலக்ஷ்மி.
திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருச்சாளக்கிராமம். (ரு)

தானத்த னதந்த தானத்த னதந்த
தானத்த னதந்த—தனதான.

சோதற்ற ஞானப்ர காசத்தி னீடத்வ
கூறிட்ட போகத்தை புணர்போதுங்

கூறைக்கு நீர்விட்ட சோறுக் கும்வேசற்ற
கூழுக்கு மேபத்தி வெகுவானல்
வேதத்தி னுண்மிக்க போதத்தி னலிட்ட
வேடத்தி னன்முத்தி பெறுவாரார்
வீணுக்கை யோபித்த ஞெய்விட்ட பாவிக்கு
மேல்வட்ட மாய்ரட்சை புரிவாயே
சீதப்ர வாகக்ரு பாலச்சர் வேசத்ரி
தேசப்ப்ர யாசித்தி யருள்வோனே
தேவர்க்கு மூவர்க்கும் யாவர்க்கு மேயுற்ற
சேடத்வ சேடித்வ முடையோனே
மாதத்வ மாய்நித்ய மாய்வித்யை சாநித்திய
மாய்வத்து வாய்சித்ர மயமானோய்
வாசத்த டாமொய்த்த சாளக்கி ராமத்தில்
வாழப்ப்ர தாபித்த பெருமாளே. (௧00)

சுவாமி - ஸ்ரீ மூர்த்திப்பெருமாள். தாயார் - ஸ்ரீதேவிநாச்சியார்.
பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

திருவதரிகாச்சிரமம். (௬)

தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன—தனதான.

உரைத ளாடிட நெஞ்சமு லர்ந்திட
முதுகு கூனிவ ளைந்துது வண்டிட
வுடைகள் சோரவொர் தொந்திச ரிந்திட நரையாகி

புழுவு நோயொடு கண்கண்ம ருண்டிட
மலச லாதிவ ழிந்துக ழிந்திட
வொருகை மீதுகு றைந்தடி யுங்கொடு நடையாடில்

விரக மாய்முன வோந்தம டந்தையர்
கிழவ ஞரிவ ரென்றணி முன்றிலின்
மிகுதி கோரணி கொண்டுதொ டர்ந்தவர் நகையாட

மிடிய ரையவெகு சந்தம ழிந்தற்
வயது போயவெ யும்பரு வந்தனில்
விடவொ ணுதெனை நின்கிருபை தந்தருள் புரிவாயே

கருணை போன்முழு வஞ்சநி னைந்தெதிர்
வரும சோதையெ னும்படி விஞ்சைகள்
கடிய மாயைபு ரிந்துந டந்தமுன் வருபேயின்

கரிய மாமுலை யுண்டுயி ருண்டெதி
ரிடுக டோரக டம்பரனை யந்தரு
கரட மால்கரி கொம்புபி டுங்கிய நெடுமாலே

மருத வேலிவ ரம்பினி ரம்பிய
குருகு பாய்தட மூங்குள மும்புது
மருத வாய்மடை யுந்தவழ் சங்கின மெதிரேறி

மணிகொள் கோபுர மண்டப முந்தெரு
மறுகும் வீதியும் வெண்டர ளஞ்சொரி
வதரி மாநக ரந்தனில் வந்தருள் பெருமாளே. (சு0க)

சுவாமி - பரமநாராயணப்பெருமாள். தாயார் - அரவிந்தவல்லி.

பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

## திருக்கங்கைகங்கரைக்கண்டம். (எ)

தனத்தந் தத்தன தந்தன தந்தன
தனத்தந் தத்தன தந்தன தந்தன
தனத்தந் தத்தன தந்தன தந்தன—தனதானா.

மருட்டுங் கட்கடை கொண்டைபு குந்திட
விணைக்கொங் கைக்குடம் ரண்டுகு லுங்கிட
மணிச்செம் பொற்குழை யுஞ்சல்பு ரண்டிட மணம்வீசும்

மருச்சந் தக்குழ லுங்கல்பு ரண்டிட
வுடுக்கும் பட்டுடை தொய்ந்துநெ கிழ்ந்திட
வளைச்சங் கக்குலம் விண்டுபு லம்பிட விழைநூல்போல்

இருக்குஞ் சிற்றிடை நைந்துது வண்டிட
நகக்கண் பட்டுநி தம்பம ழுந்திட
விறக்குங் கைத்தலம் வந்துநெ ருங்கிட மடவார்கள்

ளியற்றுஞ் சித்தின்ம ருண்டும ருண்டுயிர்
பிழைகுஞ் சத்திம யங்கிம யங்கியுள்
ளிளைக்கும் பித்தனை நின்பத முந்தொழ வருள்வாயோ

அருட்கொண் டர்ச்சனை நின்பத பங்கய
மிசைத்தந் திட்டப லன்கள டங்கிலு
மலர்க்கொன் றைத்தொடை கொண்டப ரன்சடை முடியாகு

மதிற்கண் டர்ச்சுன னன்றுப ரம்பர
னெனச்சிந் தித்துனை நம்பிய டைந்திட
மவற்கன் புற்றரு ளும்பதெய் வங்கட மணவாளா

செருக்கும் பொய்ச்சம யங்கள டங்கவொர்
பரத்வஞ் சித்தமி தென்றுதெ ளிந்ததி
செயிக்கும் பத்தச னங்கள்வ ணங்கிடு பெரியாழ்வார்

தெளிக்குந் சொற்பிர பந்தமெ னுந்திரு
மொழிச்சந் தச்தமிழ் கண்டுமெ கிழ்ந்தரு
டிருக்கங் கைச்சனை கண்டவ தொண்டர்கள்-பெருமாளே.(௧0௨)

ஸ்வாமி நீலமேகப்பெருமாள். தாயார் புண்டரீகவல்லிநாச்சியார்.
பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருப்பிருதி. (அ)

தானதன தத்ததத்த தந்த
தானதன தத்ததத்த தந்த
தானதன தத்ததத்த தந்த—தனதானு.

வார்கெழுமி முச்சகத்தொ டும்பல்
லாயிரமு கட்டடுக்க கண்ட
வானமொடு கட்டுமுட்ட ழிந்து விடுநாளில்

மாவனசன் முக்கணக்க னிந்த்ர
னாதியகி லத்துயிர்க்க ணங்கள்
வாரிதிகொ தித்தெடுத்த ருந்தி யொழியாதே

ஆர்வமொடு பெற்றெடுத்து வந்த
தாயெனவ யிற்றில்வைத்தி ருந்துள்
ளாருயிர்வ ளர்த்துரட்ச கஞ்செய் தருள்வோய்ந்

யாதொருதெய் வத்தைவைத்து வம்பி
லேதுபயன் முற்பிறப்பி னம்பி
யானந்தய யர்த்துகெட்ட தன்றி யறிவாரா

ஊரொடுபி றப்பிறப்பொ ழிந்த
நீகருபி டத்தினிற்பி றந்து
ளோரடிச கத்தினுக்கு மன்றி யுலகேழு

மோரடிப ரக்கவைத்த ளந்து
மாவலித னக்கிரக்க மின்றி
யோரடித னக்குவெற்றி கொண்ட — நெடுமாலே

வேரிவகு ளத்தொடைப்பி றங்க
ஞானமுழு முத்திரைக்கை கொண்ட
வீறர்குரு கைப்பதிக்கி லங்கு — மகிழ்மாறர்

வேதமறை யைத்தனிப்ப்ர பர்த
மாயிரம்வ டித்தெடுத்த தொங்கல்
மேவுதிரு தித்தலத்தி னின்ற — பெருமாளே. (௩௩)

**சுவாமி** - பரமபுருஷர். **தாயார்** - பரிமளவல்லி.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

---

## திருவடமதுரை. (௯)

தனதன தத்ததந்த தனதன தத்ததந்த
தனதன தத்ததந்த—தனதான.

உலகுப டைத்திடந்திவ் வுலகமெ டுத்தளந்திவ்
வுலகம டைந்தருந்தி — யொழியாதே
யுலகம ழித்துமிழ்ந்திவ் வுலகுத னிற்பிறந்திவ்
வுலகுயி ரொத்துநின்று — நிலையாகும்
அலகில்ச கத்ரயங்க ளவரவ ருக்கிணங்கி
யறுசம யத்தினின்று — விளையாடி
யருள்புரி ரட்சகங்க ளுனதுச ரித்திரங்க
ளடியெனெ டுத்தியம்ப — வசமாமோ
பலகிடை யிற்கிடந்த பசுநிறை தட்டழிந்து
பதறவி டத்திடுங்கன் — மழைமாரி

படுமொரு விற்றிகண்டு மலைகுடை யிட்டுநின்று
பரிபவ ரட்சைதந்த நெடுமாலே
மலர்வன சத்ருதும்படும் முகையவி ழுக்குடைந்து
மழலைவ ரிச்சுரும்ப ரிசைபாட
மடவெகி னக்குலங்கள் விழிதுயில் பொற்பிலங்கு
வடமது ரைப்பிறந்த பெருமாளே. (௧௦௪)

ஸ்வாமி - கோபிகாரமணர். தாயார் - உருக்குமணிபிராட்டி சத்யபாமா. பெரியாழ்வார் ஆண்டாள் மங்களாசாசனம்.

---

## திருப்பாற்கடல். (௩௦)

தந்த தனத்தாத் தனதானன
தந்த தனத்தாத் தனதானன
தந்த தனத்தாத் தனதானன—தனதானா.

சந்தை திறத்தாற் சிலசேய்மனை
பெண்டிர் சுகத்தாற் சிலதாய்தமர்
தங்கள் குணத்தாற் சிலவாசைக டொலையாது
தம்ப மெனப்போய்ச் சரணாகதி
கொண்ட கனத்தாற் சிலசாதன
சங்கை மிகுத்தாற் றனைசெய்திடு ப்ரமபாசம்
இந்தி ரசித்தாற் பிறிசோர்சயி
றன்ற னுமர்காத் திடவேவிடு
மிந்த விதத்தாற் கிடையாதுநின் னருண்மேன்மை
யெந்த விதத்தாற் கரையேறுவ
னெந்த விதத்தாற் சரணாகதி
பென்செய் வெனிர்ப்பாக் கியனுமெனை யருள்வாயே

அந்தர சித்தாய்த் திரளாகியி
　　ணங்கு மசித்தாய்ப் பலவாகிய
　　வண்ட வகுப்பாய்ப் புவிநீர்கனல் 　　　வளிவாநு

　ஐந்து விதப்பாற் றனிமாயைநி
　　றைந்து செகத்தாய்ப் பொலிவாகிய
　　டங்கி யவட்டாட் சரநாயக 　　　யெனையாள்வோய்

மந்தி ரவித்தாக் கியதேசிகர்
　　திந்தி ருணிப்பார்க் கரனூர்மறை
　　வண்ட மிழ்சொற்பாட் டியலாயிர 　　　மிசைபாட

　மங்கை யர்பற்பாற் புதசேவடி
　　வந்த னைசுத்தார்ச் சனையேசெய
　　வந்து திருப்பாற் கடன்மேவிய 　　　பெருமாளே. (கoரு)

**சுவாமி** - பரவாசுதேவர் க்ஷீராப்திநாதர். **தாயார்** - புவிமடந்தை மலர்மடந்தை. திருப்பாணாழ்வார் நீங்கிய ஒன்பது ஆழ்வார்களும் ஆண்டாளும் மங்களாசாசனம்.

வடநாடு முற்றிற்று.

---

# திருநாட்டுத் திருப்பதி.

## பரமபதம். (க)

தனதன தத்தன தானன தந்தன
தனதன தத்தன தானன தந்தன
தனதன தத்தன தானன தந்தன—தனதானா.

புதல்வரும் ரட்சக ரோகன கன்புரம
னவரவர் கெட்டனர் தாதைய ருங்க்ருபை
புரிதரும் ரட்சக ரோதன மைந்தரை — விலைகூறுவர்

பொருளு மிரட்சக மோவடு கின்றது
துணைவரும் ரட்சக ரோகவி மன்புகழ்
புனையவர் சத்யவி பீடண ரென்றிவர் — பகையானார்

கதிர்மதி ரட்சக மோநிலை நின்றில
வயனரன் ரட்சக ரோகுறை யுண்டொரு
கடவுளும் ரட்சக மோவிலை யென்குணம் — நிலையாதே

களைதுய ரைக்களை யாவிடி லிங்கெனை
யெவரினி ரட்சைசெய் வாருனை யன்றியோர்
கதியிலை ரட்சக னீகிருபை கொண்டிணை — யடிதாராய்

அதிகப ரப்ரம மாகிய ருஞ்சதுர்
மறைகளு மெட்டரி தாகியு னுந்தியி
லமைவுட னுற்பவ மாகிமுன் வந்திடு — மயனோடே

யவனருண் முக்கண னுடனிறை யென்றிட
வளர்விசு வச்சயி னுதியர் கும்பிட
வனுதின நித்திய சூரியர்வ ணங்கிட — வழகான

பதம்வரு டிக்கம லாசன செந்திரு
மகளொரு பக்கமு நீளை யிளங்கொடி
பழகுபு கழ்ப்புவி மாமக ளிங்கிவ ரிருவோர்தம்
பதியொரு பக்கமு மாகவ ளர்ந்தசல்
லரவணை யிற்ப்ரபு வாகிய லங்க்ரத
பரம பதத்தினின் மேவி யிருந்தருள் பெருமாளே. (கoரு)

சுவாமி - இலட்சுமிநாராயணர். தாயார் - பதுமை புவிமடந்தை.
பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் திருமழிசை
யாழ்வார் நம்மாழ்வார் குலசேகரவாழ்வார் பெரியாழ்வார்
தொண்டரடிப்பொடியாழ்வார் திருப்பாணாழ்வார் திருமங்கையாழ்வார்
ஆண்டாள் மங்களாசாசனம்.

பரமபதம் முற்றிற்று.

---

## திருநந்திக்கிராமம்.

தந்தத்த தானதன தந்ததன தானதன
தந்தத்த தானதன தந்ததன தானதன
தந்தத்த தானதன தந்ததன தானதன—தனதானு.

சம்பத்தி ராவணனு யர்ந்துசநி யாசமது
கொண்டிட்டு வீடினன தன்றியொரு மோகினிகொ
டங்கைப்பெ ணுசியுமி ழுந்தனளி ராகுவொடு வளர்கேது
தம்புத்தி யாலமுத ருந்தவிரு தேவசொரு
பம்பெற்று வாடினர்ப வுண்டரனின் வேடசர
தம்பெற்று மாழ்கின னறிந்துமறி யாவசட னிகராக
வம்புக்கு நானுமொரு தொண்டனென வேகொடிய
வஞ்சத்தின் வேடமது கொண்டுனடி யார்கள்குல
வங்சத்தி னுணமஃ தின்றியவ ரேடுசபை நடுவேதான்

வட்டிட்ட பாவிகதி யுய்ப்பெறுவ தெனையிய
வன்றிதீந மேசக்குலை கொண்டருள்வை யோமுடிவில்
வஞ்சிப்பய யோதிரவ னக்கொரிய தெனடைய மருள்வாயே

அம்பொற்ப டாமிட்டகொ டிஞ்சியணி சேரிடையி
ருத்திட்ட மாயுரவு சம்புமொரு பாசமும
டைந்திட்ட நாளிகண்டி டேடந்தருழ லோமெம ரிடைமோதி

ன்றரச்சு ஞதியர்மொ ழிந்தபடி யேயுனது
சங்கற்பம் யாவருநி னைக்கறிகி லாதபடி
யஞ்சித்துர் யோசனறு டிங்கவரு பாரதமென் , னடுபேரில்

நம்பிக்கையாயுனைய டைந்திடுநு ரோபதைய
விழ்த்திட்ட தாழ்குழன்மு டிந்தழிவி லாவொருந
லம்பெற்று வாழுவொரு பஞ்சவச காயமருள் புரிவோனே

நங்கர்த்த னேயரிப ரம்பரம னேசுயில
ரங்கப்ப னேபரத னின்றுதவ மேபுரிய
நந்திக்கி ராமநக ரந்தழைய வாழ்பெரிய பெருமானே.

நாற்றெட்டுத் திருப்பதித் திருப்புகழ்

முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.